உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அத்வைததூஷண நிக்கிரகம்.

இது

நாகையில் ஓர் பிரமவாதியால்

இயற்றப்பட்டு,

சென்னை:

மதராசு ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1896ஸ்

பிப்ரவரிமீ

சிவமயம்.

# அத்வைத தூஷண நிக்கிரகம்.

1895௵ டிசம்பர் ௴ 25உயில் "அநாமதேயரது ஆபாசம்" என மகுடம் புனைந்து வெளிப்பட்ட ஓர் பத்திரிகையினை யாம் கண்ணுற்றோம். அதனு ளமைந்த விஷயங்கள் சுருதி, யுக்தி, அனுபவ விரோதமா யிருப்பதால் அது விஷயமாகப் பேசத் துணிந்தோம். அப் பத்திரிகை "பிரசங்கம் கேட்டவர்களில் ஒருவன்" என்று கையொப்ப மிட்டவர் எழுதிய "அத்வைத தூஷண மறுப்பு" என்ற பத்திரிகையை ம-ா-ா-ஸ்ரீ ஜி. சதாசிவம் பிள்ளை அவர்கள் கண்டித்ததுபோல் எழுதியது மன்றி, அம்மூல பத்திரிகை எழுதியவரை 'அநாமதேய' ரென்றுங் கூறுகின்றார். அங்ஙனமாயின், தம்பேரை வியக்தமாய் எழுதாதவரைவிடத் தம்பேரை மாறாட்டமாய் எழுதி விடுத்தவர்பால் குற்றம் அதிகமாய்ச் சாருமெனச் சதாசிவம் பிள்ளை அவர்கள் அறியாமற் போன தென்னோ! நாகை நீல லோசனிப் பத்திராதிபரும் ஐஸ்கூல் தமிழ்ப் பண்டிதரும் என ஷை பிள்ளையவர்கள் தம்மை அடை கொடுத்துச் சிறப்பித்துக் கொண்டமையின், அவ்வடைகளுக் குரியவர், ஜி. சதாசிவ விஞ்சிராயரே யொழிய, சதாசிவம் பிள்ளையல்ல. சதாசிவம் பிள்ளைக்கும், சதாசிவ விஞ்சிராயருக்கும் எவ்வளவு வித்தியாச முண்டென்றால், இராமசாமி பிள்ளைக்கும், இராமசாமி நாயுடுவுக்கும் எவ்வளவு வித்தியாசமுண்டோ, அவ்வளவா மென்க. ஆகவே ஓர் பத்திரத்தில் இராமசாமிபிள்ளை யொப்பமிட வேண்டிய திருக்கத் தன்னை இராமசாமிநாயுடு என்று கையொப்பமிட்டால் எவ்வளவுபேர் மாறாட்டமும், ஆள் மாறாட்டமு முண்டோ, அவ்வளவுமாறாட்ட முண்டென்க. இது அவர் பாவந்தான்! நிற்க, இனி ஷை பத்திரிகையிலுள்ள விஷயங்களைப் பத்திபத்தியாக எடுத்து இலக்கங் கொடுத்து விசாரிப்பாம்.

## பூர்வபக்ஷம்.

1 "ஸ்ரீ நீலாயதாக்ஷி சமேதராகிய ஸ்ரீ நாகைக்காயாரோகண ஸ்வாமி சந்நிதி முக்தி மண்டபத்தில் 'வைதிக சைவசித்தாந்த சண்டமாருதம்' ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரநாயக ரவர்கள் நாலைந்து தினங்களாகச் சைவசித்தாந்தப் பிரசங்கஞ் செய்து வருவது யாவரு மறிந்த விஷயமே. அந்தப் பிரசங்கத்தைக் கேட்டவர்களில் ஒருவரென ஒரு நண்பர் வெளிப்பட்டுச் சிறு பத்திரிகை யொன்று பரப்பினார். அதில் நாயகரவர்களைத் தூஷித்திருப்பதே யன்றித் தமது படிப்பில்லாமையையும் பிரகாசப்படுத்திக் கொண்டனர். அன்றியு மவரெழுதிய சில வரிகளில் பல பிழைகள் பொதிந்து கிடப்பதோடு அவரெழுதிய விஷய மவருக்கே தெரியாதென்று யாவருஞ் சிரிக்க இடஞ்செய்து கொண்ட பரிதாபமென்க. நிற்க."

சித்தாந்தம்.

இப்பத்திரிகையில் கண்ட விஷயங்கள் பெரும்பான்மையும் நடந்த விஷயங்களே. ஆனால் மூலபத்திராதிபர் விடுத்த பத்திரிகையில் 'நாயகரவர்களைத் தூஷித் திருப்பதேயன்றித் தமது படிப்பில்லாமை யையும் பிரகாசப் படுத்திக்கொண்டார்' என வரைந்திருக்கிறது. அம் மூல பத்திரிகையில் நாயகரவர்களைத் தூஷித்திருப்பதாகச் சொல்லிய தின் காரணம் விளங்க வில்லை. ஆனால், சாஸ்திரவிசார மின்மையை நாயகரவர்கள்பால் ஏற்றியது தூஷணமென்று நம் பண்டிதர் கொண் டிருக்கலாம். அங்ஙனமாயின், நாயகர் பிரசங்கித்த விஷயம் சுருதி க்கு விரோதமென்று நிரூபித்துவிட்டால், அப்போது நம் பண்டிதர், சாஸ்திர விசாரமின்மையை அந்நாயகரிடத்தும், படிப்புண்மையை அம் மூல பத்திராதிபரிடத்தும் ஒப்பத் தடையிராதன்றோ? இன்னும் அம் மூலபத்திரிகையில் 'பல பிழைகள் பொதிந்து கிடப்பதாகக் கூறுகின் றார் நம் பண்டிதர். மூலபத்திர மெழுதியவர், இலக்கண இலக்கிய வன்மையைப் பிரசங்கிக்க வந்தவ ரல்லர். அந்நாயகர் கூறிய சித்தாந் தங்கள் சுருதியாதிகட்கு விரோதமாயிருப்பதால் அதைப் பூர்வபக்ஷஞ் செய்யமாத்திரம் எழுதவந்தவரேயா மென்க. அதிற் சிலவற்றை நம் பண்டிதர்பிழைகளெனக் கொண்டதாய்த்தெரிகிறதேயொழிய,உள்ள படி அவை பிழைக ளல்லவென்பதும், நம் சதாசிவம்பிள்ளை தமிழ்ப் பண்டித ரல்லரென்பதும் பின்னர் விசாரணையில் கண்டுகொள்க. பின் னர் அவரெழுதிய விஷயம் அவருக்கே தெரியா தென்று வரைகின் றார். இக்கூற்று அவருக்கே கூற்றாக முடியுமென்று அறியாதுபோனது அவரது பாவ மென்க. மூல பத்திரிகையில் எழுதிய விஷய மின்ன தென எழுதினவருக்கே தெரியாதென இவர் கூறுங்கால், எங்ஙனே ஷை விஷயத்தை இவர் கிரகித்து மறுப்பு எழுதத் துணிந்தார்? மூலபத் திராதிபர் எழுதியது அவருக்கே தெரியாதபோது பிறருக்கு யாது தெரியப்போகிறது? ஒன்றுந் தெரியாதுதானே. அங்ஙனம் தெரியா விஷயத்தில இவர் ஏன் தலையிட்டுத் தட்டழியவேண்டும்? ஆகையால் இவர் சொல் அநர்த்த சொல்லேயா மென்றறிக.

பூர்வபக்ஷம்.

2 "இவர் நாயகரவர்கள், அத்வைதஞானத்தை அடைதற்குரிய சாதனங் கள் சரியை முதலியன என்று கூறியது பிசகென்றும், அந்த ஞானத்தை யடைதற்குரிய உபாயம் சாதன சதுஷ்டயமே யென்றும், சரியை முதலியவற் றால் சாலோகமுதலிய பதப்பிராப்திகளே யுண்டாவதால் அவை இகலோகம் போலச் சதசத்விலக்ஷண அநிர்வசனீயப் பொருளாயிடுமென்றுங் கூறி மகிழ்ந் தனர். இவர்தாமே பின்னர் அத்வைதங் கூடாதென்று நாயகரவர்கள் பிரசங் கித்ததாக வோரசததுரை கூறியகல் குலைந்தனர். இவரது அசுத்த பத்திரி கைக்கு அத்வைத தூஷண மறுப்பு என்று நாமமுஞ் சூட்டினர்.. அனந்த ரஜ்ஜுசர்ப்ப திஷ்டாந்தத்தை நாயகரவர்கள் குறை கூறியதாகவும், திருஷ்டா ந்தமெல்லாம் ஏகதேசமென் றறியவேண்டியதெனவும், ஆகாசத்தில் நீலவர் ணம் சட்டி கூடாரம் அத்தியாசமாகத் தோன்றுவதுபோல ஆத்மாவாகிய

பரப்பிரமத்தி னிடத்தில் பிரபஞ்சம் அத்தியாசமாகத் தோன்றுமெனவும், அதனுல் அத்வைதத்திற்கு ஒரு ஹானியு முண்டாகாதெனவும் தமதுண்மை யை விரித்து வெதும்பினுர்.''

சித்தாந்தம்.

ஆம்; இப்போதும் மூலப்பத்திராதிபர் அங்ஙனே கூறி மகிழவும் நம் பண்டிதர் துக்கிக்கவும் வேதாதிப் பிரமாணம் நம் பண்டிதருக்கு விரோதமாயும் மற்றவருக்கு அநுகூலமாயும் அமைந்து கிடக்கின்றனவே; அதற்கு யார் என்னசெய்வது?

அத்வைத ஞானத்தை அடைதற்குரிய சாதனங்கள் சரியை முதலியன அன்றென்பதற்கும், அதனை யடைதற்குரிய வுபாயம் சாதன சதுஷ்டயமே யென்பதற்கும் பிரமாணங்கள் வருமாறு:—

சாமவேதம் மைத்திரேயோபநிஷத்.

மோக்ஷ இச்சை யுள்ளவனுக்குப் பாஷாணம், உலோகம், மணி, மண் இந்த ரூபமான விக்கிரகங்களிலே செய்யும் பூஜையானது புநர் ஜனனத்தை யும் போகத்தையும் கொடுக்கத் தக்கது. ஆகையால் யதியானவன் மறுபடியும் ஜனனத்தை அடையா திருக்கும்பொருட்டுத் தன்னுடைய ஹிர்தயார்ச்சனையையே செய்யவேண்டியது. வெளி அர்ச்சனையைத் தள்ளிவிட வேண்டியது.

யஜுர்வேதம் வராகோபநிஷத்.

சாதன சதுஷ்டயமாகிய நித்தியாநித்திய வஸ்துவிவேக முதலியவைகள் முமுக்ஷுவால் அடையத் தக்கனவே. அதுவே மோக்ஷ முயற்சி.

பரமசிவனுல் பிரமாவுக்கு உபதேசிக்கப்பட்ட

பிரமஞானவாசிட்டம் பிரமசூத்திரம். (க)

பிரமத்தை யறியவேண்டு மென்ற இந்த முதலாவது சூத்திரமானது நித்தியாநித்திய வஸ்துவிவேக முதலான சாதன ஹேதுக்களாற்றூன் சத் தான [illegible]க்குணப் பிரமத்தை யறியவேண்டு மெனச் சொல்லுகின்றது.

சுக்கில யசுர்வேதம் நிராலம்போபநிஷத்.

நித்தியா நித்திய வஸ்து விசாரத்திஞலே அநித்தியமாகிய சமுசார துக்கவிஷய சகல க்ஷேத்திராபிமானம் முதலிய மனோ வியாபாரமில்லாம லிருக்கிற ஸ்திதியே மோக்ஷம்.

மகோபநிஷத் 4-ம் அத்தியாயம்.

பாலைநிலத்திற்றோற்றுஞ்சலமுழுதும்பாலைநிலமேதவிர வேறில்லை. மூன் றுலகமும்சகலப்பிரபஞ்சமுமவிசாரணையினுல்சின்மாத்திரந்தானே.

பிரமகீதை மூண்டகோபநிடதார்த்தம்.

அக்கரமாகிமெய்மையாயுள்ளவப்பொருளறிந்தபோதல்லா
லெக்கருமங்களாலும்வீடில்லையாகமாதிகளியற்றுங்காற்
றக்கரமாகியநித்தமாய்ப்பேறுஞ்சுருக்கமாயிருக்கமற்றிவற்றைத்
திக்கறியாதேமுயல்பவர்முத்திசெறிந்திடார்மரணமேசெறிவார். (அ)

கருமதற்பரராய்நாங்களேயெல்லாங்கற்றவரென்றிருக்கின்ற
பெருமிதமுடையார்மூடரேபிறவாநெறியையும்பெறுகிலார்பிறவிக்
குருடர்கைப்பற்றிப்போகியகுருடர்குழியிலேகூடவீழ்வதுபோல்
மருவியவினையுந்தாங்களுங்கூடமாய்வதேயன்றிமற்றில்லை.

ஷை ஐதரேய உபநிடதம்.

மையலொன்றறவிவ்வறிவினையறியின்மாறுடன்முத்தனுமன்றித்
துய்யகன்மத்தான்மைந்தரான்மற்றோர்பொருளினாலுற்பவந்துடையான்
வையகம்பிரமவேதனந்தன்னின்மாத்திரத்தாற்பிரமந்தா
னையமொன்றறவேயாமெனமுக்காலாணையிட்டறைந்தனனவரோன். (கசு)

ஷை சாந்தோக்கிய உபநிடதம் சு-ம் அத்தியாயம்.

சாதனமாகும்சதுட்டயங்கள்சமைந்தஅத்தன்மையோர்க்கு
நீதியாகஅருமறைதானின்றேயிவர்களறியும்வணம்
பூதமாயும்புவனங்கள்பிறவுமாகியிருந்ததுவும்
ஏதமில்லாதொன்றாயபரமேயென்றேயியம்பினதால். (எஎ)

எப்பொருள்களுந்தானாகியிலங்கிடுமறிவாமீச
னப்படிவிளங்குகின்றதறிதலேயவன்றனக்கு
மெய்ப்படுபூசைவேறோர்செயலினாலன்றுமெய்யே
யிப்படிஞானந்தன்னாலிறைஞ்சிடப்படுவானீசன். (அஅ)

ஈசுவரகீதை யோக அத்தியாயம்.

கருத்திலாமூடர்காட்டமாதிகளிற்காண்பர்கற்றவர்களாகாயத்
தருக்கனிற்புனலிற்காண்பராகுதியிலருச்சனைசெய்யுமந்தணரவ்
வெரிக்கணேகாண்பரெங்குமாய்நின்றவெனதுலிங்கத்தினைநேரே
யொருக்கியபரமயோகிகளென்றுமொழிவறக்காண்பார்தம்முளத்தே. (சுச)

பிரமகீதை தைத்திரீய உபநிடதம்.

ஓதுஞ்சச்சிதானந்தவொன்றாம்பிரமமதுதன்னைப்
பேதமறத்தன்வடிவாகப்பெற்றானச்சமற்றானால் (கூஉ)

ஷை கேனோபநிடதம்.

தனக்குமெய்ப்பிரமம்விடயமாயிராமற்றானதன்சாட்சியாயிராமல்
தனிற்பிறிதறத்தானாகவப்பரத்தையறிந்தவன்றானறிந்தவனும்
தனிற்பிறிந்தறியாதவனறிந்தவனுமறிந்தவன்றானறிந்திலனும்
உனற்கரும்பிரமமுணர்ந்தவர்க்குணர்வின்றுணர்வுறார்தமக்குணர்ந்ததுவாம் ()

சரியை முதலியவற்றால் சாலோக முதலிய பதப்பிராப்திகளே உளவென்பதற்கும், ஷை பதப் பிராப்திகள் சத்தல்ல வென்பதற்கும் பிரமாணம் :—

சூதசங்கிதை முத்திநிலை.

சரியைநற்கிரியையோகந்தழுவிநன்கனுட்டித்தோர்கள்
பிரியமாரிம்மூன்றும்பல்பேதமாய்விரியாநிற்கு
மரியநம்மருளால்வையமாக்கிடுமையனைப்போற்றற்
குரியவரடையுமன்னான்சாலோகமுதலோர்மூன்றால். (உஉ)

ஷை முண்டகோபநிடதம்.

தொலையுகல்வினைப்பயன்றொலைந்தபோதிலே
தலையதகிழுறவிழுகைதப்புமோ. (௪௦)

அதர்வணவேதம் நாரத பரிவிராஜகோபநிஷத்.

போக்தா, போக்கியம், பிரேரிதா இந்தக் குணங்கள் பிரம்மத்தினிடத்தில் கயிற்றில் பாம்புபோல் ஆரோபிக்கப்பட் டிருக்கின்றன வென்பதையும், பிரபஞ்சம் மித்தை என்பதையும்; பிரமம் சர்வாத்துமாவாயும், ஒன்றிலும் சம்பந்த மற்றதாயும், அவைகளைவிட விலக்ஷணமாயு மிருக்கிற தென்பதையு மறிந்து, தானே ப்ரம்மமென்கிற நிஷ்டை யுடையவனானல், சகல பந்தத்திலிருந்தும் விடுபட்டு முக்தனாகிறான்.

யஜுர்வேதம் வராகோபநிஷத்.

இளிஞ்சலில் வெள்ளி எப்படி (அக்கியானத்தினால்) கற்பிக்கப்படுகிறதோ, அப்படிப்போல, என்னிட (பிரமம்)த்திலேயே மாயா மயமான மகதாதி ஜகத்தானது மாயையினாலே கற்பிக்கப்படுகிறது.

பரமசிவம்சொன்ன பிரமவாசிட்டம் 79-வது பிரமசூத்திரம்.

சுருதி, ஸ்மிருதிகளால் பிரமலோகைசுவரியங்களும் சுவர்க்கம் போல நசிக்கிறதாகத் தெரிகிறது.

சூதசங்கிதை மோர்சகப்பிரதனதியல்பு.

கதிரோன்றிருமுனெலாம்விளங்குங்காட்சிபோலென்றிருமுன்னர்
மதியாலியாவும்விளங்குகின்றதென்னத்தெரிமாண்பினனேவன்
வதிவார்மாயைமயமானமகத்துவமுனுலகமெலாம்
யதியாரருளின்மூழ்கிடுமென்பாற்கற்பிதமேயுண்மையிலை. (௧௩)

ஷை சத்தாவிசாரம்.

அத்தகுசத்தாவாகியபிரமம்மமண்கடாதியானற்போற்
சுத்தமாமுனிவீர்பற்பலவானசொரூபங்களாய்ப்பரிணமிக்கு
முத்தமப்பிரமம்பவஞ்சமாய்த்தோன்றலொளிதருசுத்திவெண்பொன்னய்
வித்தமுறத்தோன்றிடுதலேபோலும்வேதமுமிங்ஙனமுரைக்கும். (௬)

சிவாகசியத்தின் ஆறவது அம்சம் ரிபுகீதை இரண்டாவது அத்தியாயம்.

இத்துவிதசகத்தெவையும்விவகாரத்தில்யாவர்க்கு
மெதிராகத்தோற்றலாலேசித்தின துவிவர்த்தமதாம். (௩௪)

தாயுமானவர் பாடல்.

அண்டபகிரண்டமும்மாயாவிகாரமேஅம்மாயையில்லாமையேயாம்.
பாராதிஅண்டமெலாம்படர்கானற்சலம்போல்.

தேன்முகம்பிலிற்றும்பைந்தாட்செய்யபங்கயத்தின்மேவும்
நான்முகத்தேவேநின்னனாட்டியஅகிலமாயை
கான்முயற்கொம்பேயென்கோகானலம்புயலேயென்கோ
வான்முகமுளரியென்கோமற்றென்கோவிளம்பல்வேண்டும்.

இத்யாதிப் பிரமாணங்களுக்குவிரோதமாய்ப் பிரசங்கித்தநாயகரவர்கள்பால் படிப்பின்மையை மூல பத்திராதிபர் ஏற்றிச் சொன்னது

தூஷணமாமா? இப்போதாவது நம் பண்டிதர் நாயகர் பால் படிப்பின் மையையும், மற்றவர்பால் தூஷணமின்மையையும் ஒப்பத் தடைபிரா தென்று நம்புகிறேம். பின்னும் ' இவர்தாமே பின்னர் அத்வைதங் கூடா தென்று நாயகரவர்கள் பிரசங்கித்ததாக வோரசத்துரை கூறி யகங் குழைந்தனர்' என்று வரைகின்றூர். இதனுல் ஷை நாயகர் அத் வைதத்தை அங்கீகரிப்பதாய் ஏற்படுகின்றது. அங்கீகரிப்ப துண்மை யாயின் உலகு சத்தியமென்றும், முத்தியில் ஜீவேச பேதம் உண் டென்றும் இவைபோலப் பிறவுங் கூறுவது கூடாது. ஆகவே, அவர் அத்வைதத்தைத் தூஷிக்கின்றூரென்பது சத்தியம்.

அடியில் வரும் பிரமாணங்கள் உலகு பொய்யென்றும், முத்தி யில் ஜீவேச பேதமின்றென்றும் பிரமம் ஒன்றே சத்திய மென்றுங் கூறி அத்வைதத்தை நிலைநிறுத்துகின்றன :—

யசுர்வேதம் சர்வசாரோபநிஷத்.

மித்தையெது? இல்லாத பிரபஞ்சத்தைப் பிரமத்தி லாரோபிப்பது.

சுக்கில யசுர்வேதம் நிராலம்போபநிஷத்.

பிரமம் சத்தியம், ஜகத்பொய்.

சூதசங்கிதை பஞ்சாக்ஷரம்.

பரமசிவசொரூபத்திற்கன்னியமாயுள்ளதெல்லாம்மித்தையாவதினுல்.

பிரமகீதை தைத்திரீய உபநிடதம்.

யாதொருபொழுதுகாட்சிமுதலிலதாம்பரத்திற்
பேதமதறவுணர்ந்தானப்பொழுதபயனுகிக்
கோதிலாவமிர்தமெய்துங்கூடுமேற்சிறிதுபேதஞ்
சாதலும்பிறப்புமச்சஞ்சார்தலுஞ்சங்கையில்லை. (உ...

சிதுஞ்சச்சிதானந்தவொன்றும்பிரமமதுதன்னைப்
பேதமறத்தன்வடிவாகப்பெற்றுனச்சமற்றுனுல். (கஉ...

கேனோபநிடதம்.

எப்பொருளுமாயையினுலெனச்சிலவரியம்புவர்கண்
மெய்ப்பரமன்றனையொழியவேறொருமாயையுமில்லை
யொப்பரியபரனெழியவொருமாயையுண்டாகி
லப்பரமன்றன்பெருமைக்கதுகேரேயழிவன்றே. (உ...

பெருமையினிற்சங்கோசம்பிறவாதுபிறக்குமெனி
லருமறைவாக்கியம்பொய்யாமப்பிரமாணமுமாகும்
பொருவில்பரானந்தபரிபூரணமெய்ச்சுடராகுந்
தெரிவருமாதேவனல்லாற்றிகழ்வதொருசிறிதுமிலை. (உ...

சூதசங்கிதை வேதாவிரோதம்.

அறையாரணஞ்சத்தியமானஅத்துவிதநற்பரமென்றும்
பறையாநின்றகற்பிக்கப்பட்டதுவிதபரமென்றுந்
துறையாரிரண்டாந்துவிதபிரபஞ்சங்காணப்படலானுங்
குறையாப்பரத்தாரோபிதமாய்க்குலவலானுங்கற்பிதமே. (

துவிதமறையளவையிச்சியா துதொகுகாட்சிமுதலளவைகட்குத்
தவிர்தலில்கோசரமாய்முக்கியப்பயனிலாததாய்த்தங்கலாலே
யவிர்மறைமுக்கியவளவையன் று துவிதத்திற்காயினுமவ்வேதந்
துவிதத்தையனுவாதமுன்செய்தத் துவிதமேசொல்லுமீற்றில். (எ)

ஷ ஞானயாகம்.

மல்லலான்மாபலவாய்த் தோன்றுவதுஞ் சிவான்மாபரான்மா வெனும்
பேதந்தோன்றுமதுவுஞ், சொல்லலுறினுபாதியாலன்றிமாமுனிவீர்சுபாவத்தி
னின்றஃதெப்படியென்னிற்கேண்மின், வல்லகடமுதலாயவுபாதிசம்பந்தத்
தால்வான் பேதமாய்த் தோன்றுமது போலுமுணர்வீர்,செல்லவில்வேதாந்த
வாக்கியங்களெலாம் பரமசிவனொருவனேயென்னத்தெரிவிக்குமாளும்(உச)

சிவரகசியம் அத்துவித உண்மை.

பாசமிலைபசுவுமிலைபதியுமில்லை
யேகபரிபூரணமாயிகழாச்சித்தாய்
எப்போதுமுளதுபரப்பிரமமொன்றே, (எ)

ஞாதருஞாநதிகளோரணுவுமில்லை
ஈனமிலாச்சின்மயமாயிலங்குஞ்சித்தாய்
இன்புருவாயுளதுபரப்பிரமமொன்றே. (கக)

ஆனதா லிவர் கொள்ளு மத்துவிதம் உண்மையில் அத்வைத மன்று; துவிதமேயாம். இன்னும் மூலபத்திரிகையை 'அசுத்தபத்திரிகை' என்று அழைக்கின்றார். அது அசுத்தமாயின், அப்பத்திரிகையினு ளடங்கிய விஷயங்களை ஆதரிக்கும் வேதாந்திகளையு மங்ஙனமன்றோ கூறல் வேண்டியதாகும்? இங்ஙனங் கூறுவதால் நம் பண்டிதர் வேதபாகியராவரன்றோ? இரச்சு சர்ப்பதிருஷ்டாந்தத்தைப்பற்றிக் கடைசிப் பத்தியில் கண்டுகொள்க.

பூர்வபக்ஷம்.

ஞ. "இவருக்கு நாயகரவர்களது பிரசங்கம் சரிப்படாமற் போயின்சபையார் முன்னிலையிலேயே நாயகரவர்களைக் கேட்டு ஒழுங்கு செய்துகொண்டிருக்கலாம். ஏகாந்தத்திலிருந்து இரண்டுவரி தப்பில்லாமலெழுதவே தெரியாத இவர் : எண்ணிறந்த அறிஞர்சூழச் சபை மத்தியிலிருந்து பிரசங்கிக்கும் நாயகரவர்கள் முன்னின்று வாய்திறக்க யோக்கியதை யில்லாதவரென்பதை யாம் சொல்லவேண்டுமோ? தப்புப் பத்திரிகை யெழுதி விட்டதனாலேயே இவரை வெற்றியாளரென்று விவேகிகள் மதிப்பார்களோ? இவர் அளவுக்கு மிஞ்சின காரியஞ் செய்தாரென்று யாவரும் வெறுக்கின்றன ரென்க. இனி இவரது அறிவி னகலத்தைச் சிறிது எடுத்துக் காட்டுவோம்."

சித்தாந்தம்.

இதனால் இவருக்குப் பிரசங்கவொழுங்கே தெரியாதென்பதை வெளியிட்டுக் கொண்டதோடு, வீண் கலகத்திற்கும் ஆஸ்பதம செய்கின்றவ ராகின்றார்.ஒருவர் பிரசங்கஞ் செய்யும்போது பிரசங்க மத்தியில் எழுந்து வேறொருவர் சங்கிப்பது எவ்வளவும் அடாதென நம்

பண்டிதருக்குத் தெரியாதுபோலும்! அங்ஙனம் மத்தியிற் பேசுவதற்கு இவர் கூறியவண்ணம் பிரசங்கியும் அதனைக் கேட்கும் அறிஞரும் ஒப்புவரேல், வேதாதிப் பிரமாணங்களைத் தமக்கு ஆதாரவாகக் கொண்ட மூலபத்திராதிபர், அங்ஙனஞ் செய்யச் சிறிதும் பின்னிடாரென்றறிக. அடுத்த தடவை யிங்கு வரும்போது மேற்படி பத்திராதிபர் தமக் காதரவாகச் சொல்லும் வேதாதிப் பிரமாணங்களின் உண்மையை நாயகர் கேட்டுத் தெளியலாம். அப்போது நாயகரவர்கள் முன்னின்று வாய்திறக்க "யோக்கியதை" உண்டோ, இல்லையோ வென்று நம் பண்டிதர் அறிந்துகொள்ளலாம்.

மூலபத்திரிகையைத் 'தப்புப்பத்திரிகை' என்று பேரிட்டார் நம் புலவர். வேதாதிப் பிரமாணங்களுக்கும் அதன் சார்பிற்குங் கட்டுப்பட்டுப் பேசும பத்திரிகைத் தப்புப் பத்திரிகை யாகும்போது, அதை மறுத்துப்பேசும் பத்திரிகை என்னபெயர்கொண் டழைக்கத்தகாது? அதோடு வேதபாகிய பத்திரிகை யாகுமன்றோ?

'வெற்றியாளரென்று விவேகிகள் மதிப்பார்களோ?' வென்று நம் பண்டிதர் வரைகின்றார். ஆம்; மதிப்பார்கள். மூலபத்திராதிபர் சுருதி யுக்தி யனுபவ சம்மதமாய்ப் பேசுகின்றனமையின், அவரை வெற்றியாளரென அறிஞர் பலரும் மதிப்பார்க ளென்பதி லைய மின்று; அதோடு அவைகட்கு விரோதமாகப் பேசுபவரைத் தோல்வியாளரென்று மதிப்பார்களென்பதிலு மையமின்று.

மூலபத்திராதிபரது அறிவின் ஆழத்தை அளவிட அசக்தராய் 'இனி இவர் அறிவின் அகலத்தை யெடுத்துக் காட்டுவாம்' என்கிறார் நம் பண்டிதர், ஆகையின் அவ்வகலம் எவ்வளவினதென்று இவர் காட்ட யாம் காண்போமாக,

### பூர்வபக்ஷம்.

"ஸ்ரீதாயுமானஸ்வாமிகள் துவிதஞானமே அத்துவிதஞானத்தை யுண்டு பண்ணுமென்றும் அதனால் தமக்குச் சரியையாதிகளே போதுமென்றுங் கூறியதனையே நாயகரவர்கள் பிரசங்கித்தனர். இதனையே இப்போது இந்தப் படிப்பில்லாத பாவலர் தூஷித்தவ ராயினர். ஸ்ரீதாயுமானஸ்வாமிகளையும், ஸ்ரீநாயகரவர்களையும் தூஷித்தவரது சாதனசதுஷ்டயம் சரியையாதி ஸைவ சாதனங்களின் முன்னர்த் தலைதூக்காதென்க. இனி சரியையாதிகள் அத்வைதத்திற்குச் சாதனமென்று நாயகரவர்கள் கூறினரென்பதுகொண்டு அவர் அத்வைதத்தைப் பூஷித்தாரென்பதே யன்றித் தூஷித்தாரென்று ஒருவருங் கொள்ளாரென்க. இங்ஙனமாக, இவர் முன்கூறியதற்கு மாறாகப் பின்னர் அத்வைதஞானத்தை நாயகரவர்கள் தூஷித்தாரென்று பிணங்கி யுரைத்தது மதியாமா? அத்வைதத்தைப் பூஷித்தாரென்றும் தூஷித்தாரென்றும் நிலை மாறிப் பேசுவது இவரது பிரமத்தை அநாதியே தொடர்ந்த பிரமை அந்தப் பிரமத்தின் குஞ்சாகிய இவரை யின்னும் விட்டொழிந்திடாதலைத்தலினாற்றானென்க. நிற்க."

## சித்தாந்தம்.

இது மிகவாச்சரியம்! தாயுமானர்கூறிய வுண்மையையும் நாயகர் அதைப்பற்றிப் பிரசங்கித்த வுண்மையையும் தூஷித்ததாக மூலபத்திரிகையில் ஒன்றுங் காணேமே; ஏன் நம் பண்டிதர் இல்லாததை எடுத்துக் கூறல்வேண்டும்? தாயுமானர் "வேதமுடனுகம புராண விதிகாசமுத" வென்ற பாட்டில் துவிதஞானத்தையும் கிரியையாதிகளையும் நாயகர் பிரசங்கித்த வண்ணம் தாதாத்மியப்படுத்திக் கூறினரேனும் "ஞாதுரு ஞான ஞேயங்களற்றவர்க் கருத நட்புடைக்கலப்பே" என்றும், "காண்பானுங் காட்டுவதுங் காட்சியுமாய் நின்ற அந்த வீண்பாவம் போயதுவாய் மேவுநாள் எந்நாளோ" என்றும் அத்தாயுமானவரே கூறியமையாலும் அதில் திரிபுடி உளவாகையாலும், அத்திரிபுடியில் கடபடாதி ஞானமுஞ் சேருமாகையாலும், அந்த ஞானம் தள்ளத்தக்கவைகளையுங் கொள்ளத்தக்கவைகளையும் அடக்கியுள்ள தாகையாலும்; இவை தள்ளத் தக்கவை, இவை கொள்ளத் தக்கவை என்று நிதானிப்பதற்குச் சாதன சதுஷ்டயத்தில் முதற் சாதனமாகிய நித்தியா நித்தியவஸ்து விவேகம் இன்றியமையாத தாகையாலும், சாதன சதுஷ்டயமே அத்துவித ஞானத்திற்கு முக்கியமானமையாலும், ஏனைய சரியையாதி அமுக்கிய மாகையாலும் அச்சரியையாதிகள் தள்ளத்தக்கவை யென்று மூலபத்திராதிபர் கூறவந்ததாக வெளியாகிறது. இக்கருத்தைத் தனக்குள் அடக்கியன்றோ வாதுளாகமத்தில் பரமசிவம் பார்வதி அம்மைக்குப் பின் வருமாறு உபதேசித்திருக்கின்றார்?

### தேவிகாலோத்தரம்.

மந்திரஞ் சபந்தியானம் பூசனை வணக்கம் வேண்டா
அந்தமிலாத முத்திக் குபாயமே யறியவேண்டும், (கஉ)

பின்னும் 'சாதன சதுஷ்டயம் சரியாதி சைவ சாதனங்களின் முன்னர் தலைதூக்காதென்க' என்கிறார். இதற்கு ஒரு சாட்சியுங் காணேம்; நியாயமும் கூறிற்றிலர். பிரமாணமின்றி வாயில் வந்தபடி சொல்லுகிறதாக விருந்தால் "முட்டை தூக்கி முத்திய"னும் பிரசங்கியாவா னன்றோ?

சரியையாதிகள் சாலோகமுதலிய பதவிகளைப் பயக்குமாகையாலும்,நம் பண்டிதரும் அங்ஙனமே 7-வது பத்தியில் ஒப்புக்கொண்டிருக்கிறு ராகையாலும்,சாலோகாதி பதவிகள் அநித்தமாகையாலும், சாதன சதுஷ்டயத்தின் முதற் சாதனம் நித்தியா நித்திய வஸ்து விவேகமாகையாலும், அச்சாதனம் சாலோகாதி பதவிகளை அநித்தமென்றுதள்ளிப்பரமோக்ஷத்தைத் தருகின்றமையாலும், பரமோக்ஷம் பதவி மோக்ஷத்தைப் போல் அநித்தமாகாது நித்தமா யுள்ளதாகையாலும், நித்தமாகிய பரமோக்ஷத்தைக் கொடுக்கும் சாதனசதுஷ்டயங்களு ளொன்றான நித்தியா நித்தியவஸ்து விவேகத்திற்கு முன்னர்

அநித்தமாய பதவிகளைப் பயக்கும் சாதனங்களாகிய சரியையாதிகள் தலைதூக்குவது யாங்ஙனமோ! மேலும் சாதன சதுஷ்டயம் அறிவை யோர் வழிப்படுத்துவதாய பயிற்சியேயாம். ஞானம் அறிவின் றருமம்; தேகத்தின் றரும மன்று, ஆகையால், அறிவின் பயிற்சியே அதன் முதிர்ச்சியாகிய ஞானத்தைப் பயக்கு மென்றறிக.

சரியையாதிகள் தேகத்தின் தொழில். தேகத்தை எவ்வாறு பயிற்சி செய்யினும் அறிவு பயிலாது. அறிவு பயிலாதபோது அதன் முதிர்ச்சியாகிய ஞானம் கிட்டுவது யாங்ஙனம்? இனி அச்சாதன சதுஷ்டயத்தில் மூன்றாவது சாதனையின் ஒரு கூறாகிய (உட்கரணத்தை யடக்குவதாகிய) "சமம்" ஞானத்திற்கு இன்றியமையாத தெனச் சாதிக்கவந்த தாயுமானார்: "சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற திறனரிது" என்றும், "பாழான என்மனம் குவிய ஒரு தந்திரம் பண்ணுவ துனக்கருமையோ" என்றும் இன்னும் பலவாறாக எடுத்துக் கூறினர் காண்க.

'அத்வைத ஞானத்தை நாயகரவர்கள் தூஷித்தா ரென்று பிணங்கி யுரைத்தது மதியாமா?' என்கின்றார் நம்பண்டிதர். அங்ஙனம் மூலபத்திராதிபர் உரைத்திருந்தால் அவர்மேல் குற்றந்தான். ஆனால் சிவத்தின்கண் பிரபஞ்சம் சத்தியமென்று நாயகர் கூறின், அவர் எங்ஙனம் அத்வைதத்தைப் பூஷித்தவராவார்? தூஷித்தவர்தானே. இதுவன்றி மூலபத்திராதிபரை இவர் பிரமத்தின் "குஞ்சு" என்கின்றார். ஆம்; நாம்பிரமத்தின் குஞ்சுதான். நாம்வேதத்திற்கும்,வேதாவிரோதமான புராணாதிகட்கும் கட்டுப்பட் டொழுகுகின்றே மாகலின், நாம் பிரமத்தின் குஞ்சு என்று சொல்வது எமக்குப் பெருமையேயாம்.

மைத்திராயண்ணி யுபநிஷத் 6 வது பிரபாடகம்.

தனக்குள்ளேயே யிருக்கிற ஆத்மா (பிரமம்) வினிடத்திலிருந்து சகல பிராணன்களும், சகல வேதங்களும் சகல தேவதைகளும் சகல பூதங்களு முண்டாகின்றார்கள். (௩௨)

அப்பிராணனிடத்திலிருந்து(பிராணாதி விசேஷமற்றசிதாத்துமாவிடத்திலிருந்து) பிராணனென்றுசொல்லப்பட்ட ஜீவனுண்டானபடியால். (௩௩)

யோகசிகோபநிஷத் 4-ம் அத்தியாயம்.

அந்தப் பிரமத்தில் ஜீவனென்கிற சப்த முண்டாயிருக்கிறது.

முண்டகோபநிஷத் 2-1-1.

ஓ சௌமியா! அது சத்தியமானது, எரிந்துகொண்டிருக்கிற அக்கினியிலிருந்து அதேரூபமாய் அனேக பொறிகள் எப்படி உண்டாகின்றனவோ, அப்படியே அக்ஷரத்திலிருந்து பலவித தேகத்தை யுபாதியாயுடைய ஜீவர்களுண்டாகின்றார்கள்.

ஸர்வசாரோபநிஷத்.

அதில் (பிரமம்) பிரதிபலித்துப் பிரகாசித்துக் கொண்டிருக்கிற சைதன்னியமானது க்ஷேத்திரஞ்ஞ னெனப்படுகிறான்.

பிரமகீதை முண்டகோபநிடதம்.

தற்பரனுருவஞ்சித்தே தற்பரனிடையேயக், கற்பித சிவன் ஞானுமதா னக்காலந்த. (சூஉ)

விஷ்ணுபுராணம் 1-ம் அம்சம் பிரகலாத சரித்திரம்.

எவனிடத்தின்றும் மூலப்பிரகிருதியும், சமஷ்டிரூபஞன க்ஷேத்திரக்கிய னும் உண்டானார்களோ, அப்படிப்பட்ட சர்வகாரண பூதனன ஸ்ரீ விஷ்ணு தேவன் நமக்குப் பிரசன்னனுகக் கடவன்.

ஷை 6 - ம் அம்சம் பிராகிருதப் பிரளயம்.

வியக்தாவியுக்த சொரூபமான பிரகிருதியாதுண்டோ; அதுவும் புருஷ னென்று சொல்லப்பட்ட ஜீவனும் அந்தப் பரமாத்துமாவிலே இலயப்படுகின் ருர்கள்.

இப்பிரமாணங்களால் ஜீவர்கள் பிரமத்திலிருந்து தோன்றுவன வாக விளங்குகின்றமையின் வைதிகர்கள் பிரமத்தின் குஞ்சுகளாகின் ருர்கள். வைதிகரல்லாத வேதபாஹியர்க்கு இஃதுடம்பா டன்மை யின், அவர் மாயையின் குஞ்சுகளா மென்றறிக.

பூர்வபக்ஷம்.

5வது "இவர் அத்வைதமென்று கொண்டது ஜீவனுகிய தன்னையே தான் ரேன்றித் தம்பிரானுகக் கொண்டு தன்னிலே தன்னைக் கண்டு தன்னைத் தானே யனுபவித்திருக்கு நிலையை. இது சர்வாஸங்கதம். இவர் பிரமமெனத் துணிந்த சீவனுகிய தான் அஞ்ஞானி. இவருக்கு மாயையாகிய தேகேந்திரியா திகள் துணைசேராதபோது அறிவு நிகழாது. இவர் சுத்த அறிவாயின் பாஹியாந் தக்கரண சையோகத்தால் அறிவெய்த லொழிந்து அறிவு மாத்திரமாய்ச் சேடித்துப் பிறங்கா தொழிவானேன்? இவர் தன்னில் தன்னைத் தானே காணுதல் ஒருவனது கண்ணனது தன்னில் தன்னைத்தானே காணுதல் போ லாம்."

சித்தாந்தம்.

நம் மூலபத்திராதிபர் இங்ஙனம் கூறுவதாக எங்கே கண்டார்? ஐயோ பாவம்! ஜீவன் சத்துப்போலிப்பொருளென வேதபுராண இதி ஹாசங்களில் கூறியது இவருக்குத் தெரியாதுபோலும். இவர் சொல் லிலக்கணம் கற்ருரே யன்றித் தன்னிலக்கணம் கற்ருரின்று.

ஜீவன் சத்துப் போலிப் பொருளென்பதற்குப் பிரமாணம்.

சாமவேதம் மைத்திராயண்ணி உபநிஷத் 5-வது பிரபாடகம்.

இதுதான் ஆத்மாவினுடைய ஓரம்சம். (கடாகாசம்போல்) இந்த அம்ச மானது சேதனமாத்திரமாக விருக்கிறது. ஒவ்வொரு பிராணி யிடத்திலும் (அனேக ஜலபாத்திரத்தில் சூரியன்போல) பிரதிபிம்பமா யிருக்கின்றது. அதுதான் க்ஷேத்திரக்ஞன். பாதமுதல் சிரசுவரை தேகத்தைத் தானே என்று அறிகிறவனுகிய ஜீவன்.

யசுர் வேதம் ஸர்வஸாரோபநிஷத்.

அதில் பிரதிபலித்துப் பிரகாசித்துக் கொண்டிருக்கிற சைதன்னிய மானது க்ஷேத்திரக்ஞன் எனப்படுகிருன்.

### சூதசங்கீதை பரமவிஞ்ஞானம்.

முன்னுமவித்தையாற் பசுபேதமும் மொய்வலியமாயையால்
மன்னுபரதத்துவபேதமுங் கற்பிக்கப்பட்டதுவான்
மன்னுதேகேந்திரியாதி வாசனுபேதத்தாலே
பின்னும் பேதமாமவித்தைபேசுபசுபேதத்திற்கும். (சு)

### ஷ சர்வசாத்திரசங்கிரகம்.

உன்னு பரதத்துவ முபாதி பேதத்தாலே
மன்னுஜீவான்மா பரான்மாவென் றிருவிதமாய்
மன்னு மவற்றுட் சீவர் மருவி யிருவினைகளோடு
துன்னுசமுசாரிகளா யிருப்பரெனச் சொல்லுவரால். (எ)

### பிரமகீதை கடவல்லி சுவேதசுவதர உபநிடதம்.

ஏயபேருலகில் வினைப்பய னுகர்ந்தங் கிதயமே மருவுவா ரிருவர்
சாயையாதபமாகின்றனர் சிவசங்கரரென் றிடத்தகுவா
ரோயு மாறறவே யுண்பவன்சிவனூட்டுவான்சிவனிவர்தமக்கிங்
காயபேதந்தானுபாதியால்வந்ததல்லதபேதமேயாகும். (அ)

### சிவாகசியம் ரிபுகீதை 11-வது அத்தியாயம்.

சிவபர சகத்தெனவே காண்பதெல்லாம் சின்மயமாம் பிரமத்திற் கற்பிதந்தான். (௧௦)

1-வது. ஜீவனைப் பாவப்பொருளாகச் சித்தாந்தப்படுத்திக்கொள்ளின், அதனுல் வரும் அனர்த்தங்க ளிவருக்குத் தெரியாபோலும். இவர் மதத்தில் ஜீவனும் பாவப்பொருள், சிவனும் பாவப்பொருளாகலானும், இவ்விரண்டும் அந்நியோந்நிய பாவப்பொரு ளாகலானும், அந்நியோந்நிய பாவப்பொருள்கட்கு இருமையற்ற சையோகங் கூடாதாகலானும் ஜீவனும் சிவமும் இரண்டறக் கலத்தலென்பது வெறும் வாய்ப்பேச்சே யொழிய உண்மையில் கூடவே கூடாது.

2-வது. இரண்டு அந்நியோந்நிய பாவத்தையுடைய பாவப்பொருள்கள் இரண்டறவேனும், ஒன்றுகாமல் இரண்டாகாமல் ஒன்றும் இரண்டு மன்றுகாமலேனும் எவ்விதமாய்க் கலப்பினும் அவ்விரு பொருள்கட்கு முள்ள சம்பந்தம் சையோக சம்பந்தமேயாம். அங்ஙனமே மாயாவாத துவித சைவர்கள் கொள்கைப்படி ஜீவன் சிவனல்ல, சிவன் ஜீவனல்ல ஆகலின், இவ்விரண்டு பொருள்களும் அந்நியோந்நியப் பொருள்களாதலன்றி, இரண்டும் பாவப்பொருள்களுமாம். இவ்விரண்டு பொருள்களும் மோக்ஷத்தில் இரண்டறவேனும் ஒன்றுகாமல் இரண்டாகாமல் ஒன்று மிரண்டும் அன்றுகாமலேனும் கலப்பினும் அவ்விரு பொருள்கட்குமுள்ள சம்பந்தம் சையோக சம்பந்தமேயாம். இனி எங்கெங்கே சையோகமுண்டோ, அங்கங்கு விபாகமுண்டென்னும் வியாப்தி யுளதாகலின், இச்சையோகத்தை யடைந்த பொருள்கட்கும் விபாகம் உண்டு. ஆகலின் சிவத்தினிடத்து ஜீவன் எவ்வகையாகக் கலந்தாலும் அவன் ஓர் காலத்தில் சிவத்தினின்றும் பிரியவேண்டியவனே யாம். பட்டினத்தடிகளும் "புணர்ந்தன பி

யும், பிரிந்தன புணரும்" என்று கூறியிருக்கின்றமை காண்க. "கூடுத லுடன் பிரிதலற்று" எனத் தாயுமானுர் கூறிய வுண்மையினையு முணர்வாராக.

3-வது. இவர் மதத்தில் கூறியபடி இவர் மதத்தினர் சிவத்தினிடத்தில் இரண்டறக் கலந்து மோக்ஷத்தை யடைந்தார்களல்லவா? அம் மோக்ஷப்பேறு பாவபதார்த்த மாகையாலும், ஆதியையுடையதாகையாலும், பாவபதார்த்தங்களெல்லாம் ஆதியுடையனவேல் அந்தமு முடையனவாகையாலும், அடைந்த மோக்ஷப்பேறும் ஆதியுடையது பற்றி அந்தமு முடையதாமென்க.

இத்தியாதி நியாயங்கள் பல வுள; அவற்றை யொருவாறிங்குக் கூறினும். ஆகையால் பசுவைப் பாவப் பொருளாகக் கொண்டால் முதல் நியாயப்படி சிவத்தோடு ஜீவன் இரண்டறக் கலத்தல் கூடாதென்றும், 2-வது நியாயப்படி கலந்தால் பிரித லுண்டாமென்றும், 3-வது நியாயப்படி மோக்ஷப்பேறு அந்தத்தை யுடையதென்றும் அறிக.இதனுல் இவர்மதத்திற் கூறு மோக்ஷம் நித்தியமன்று; அழிவை யுடைய அநித்தமாமென்க. இம்மோக்ஷத்தைச்சரியையாதிகள் கொடுக்கும் என்று நம்நாயகர் பிரசங்கித்தது சரியே; ஆனுல் மூலபத்திராதிபர் குறித்த மோக்ஷம் இதுபோன்ற அநித்த நிலைமை யுடையதன்று; நித்த நிலைமை யுடையதாம். அதை யடையத்தான் சாதனசதுஷ்டயம் இன்றிமையாதது என்று வேதாதிகள் கூறின. இதனை இவர் உய்த்துணரக் கடவர்.

ஷ பத்தியில் கூறிய அநேக விஷயங்கள் மூலபத்திரத்தி லில்லை. நம் பண்டிதர் மற்றவர தில்லாச் சித்தாந்தத்தைத் தெரியாது வீணே எழுதுகின்ருர். இது நியாயத்திற்கு விரோதம். ஒரு மதத்தைக் கண்டிக்க எழுபவர்: அம்மதத்தவர் கொண்ட சித்தாந்தங்களுக்கு அவர்கள் எக்கருத்தமைத்துக் கூறுகின்ருர்களோ, அக்கருத்தை உணர்ந்து அச் சித்தாந்தங்களில் தமக்குத் தோன்றும் அசம்பவங்களைக் கண்டித்தல் தகும். அங்ஙன மின்றித் தம்மனத்திற் கேற்றபடியும், தம் மதத்திற்கு ஏற்றமுறவும் பேசுதல் நியாய வழியின்மையைக் காட்டுமென நம் புலவர் அறியக்கடவர். 'ஜீவனுகிய தன்னை' என்கிருர் நம்புலவர். மூலபத்திராதிபர் முத்தி நிலையில் தானென்பதற்குப் பொருள் ஜீவனல்லவென்பர். 'பிரமமெனத் துணிந்த ஜீவனுகிய தான் அஞ்ஞானி' என்கின்ருர் நம்புலவர். மூலபத்திராதிபரோ பிரமமெனத் துணிந்த தன் சொரூபம் ஞானம் என்பர்.

4-வது 'மாயையாகிய தேகேந்திரியாதிகள் துணை சேராதபோது அறிவு நிகழாது' என்கின்ருர் நம்புலவர். ஆம்; கடபட அறிவுநிகழாது தான். 5-வது 'இவர் சுத்த அறிவாயின், பாஹியாந்தக் கரணசையோகத்தால் அறிவெய்த லொழிந்து அறிவு மாத்திரையாய்ச் சேடித்துப் பிறங்கா தொழிவானேன்?' என்கிருர் நம்புலவர். அறிவு மாத்திரை

யாய்ச் சேடித்தபோது பாஹியாந்தக் கரண சையோக மின்மையின், கடபட அறிவு எய்தா தொழியும் என்றும், அவித்தையோடு கூடிய சுழுத்தியே இதற்குச் சான்று மென்றும், அறிவு மாத்திரையாய்ச் சேடித்தபோது தனக்கு அன்னிய மின்மையால் பிறங்காது என்றுங் கூறுவர் அத்வைதிகள். 6-வது. 'இவர் தன்னில் தன்னைத் தானே காணுதல் ஒருவனது கண்ணானது தன்னில் தன்னைத்தானே காணுதல் போலாம்' என்கிறார் நம்பண்டிதர். தன்னிடைத் தன்னைக் காணுதலாவது ஆரோபத்தால் கொண்டிருந்த தேகாதிப் பிரபஞ்சத்தைத் தானல்லவெனத்தள்ளி, கேவலம் பிரமஞான சொரூபமாய் முத்தியில் காணுதலென்பார் அத்வைதிகள். இந்தப் பத்தியில் கூறிய விஷயங்கள் அவ்வளவும் நம் பண்டிதரின் நியாய வலியின்மையைக் காட்டின.

## பூர்வபக்ஷம்.

6-வது "இனி எம்மனோர் துணிந்த அத்வைதம் ஆத்மநாயகி யானவள் தனது பரசிவ நாயகனைக் கூடி யனுபவிக்கும் இன்பநிலையேயாம். 'தாயுடன் சென்று பின்தாதையைக்கூடிப் பின்றாயை மறந்தேயுமதே நிட்டை யென்றானெழிற் கச்சியேகம்பனே' என்ற மூதுரையே இதற்குச் சான்றாம். இனித் துவிதம் அத்துவிதமென்னுஞ் சொற்கள் சைவர்கட்கே உரியனவாம். இவற்றுள் அத்துவிதச் சொல்லை ஜீவாத்ம வாதிகள் களவாடின ரென்பதே முடிவென்றறிக. நிற்க."

## சித்தாந்தம்.

நாயகனைக் கூடி யனுபவிக்கும் இன்பம் சற்றுப்போதாகையாலும், அக் கூட்டுறவு தொம்சா பாவமுடைய தாகையாலும் அவ் வின்பம் நித்திய வின்பமாகாது. அங்ஙனமே பட்டினத்தாரும் 'ஏயுமதே நிட்டை' என்றார். நிட்டை கலைந்தபோது தாதையோடு 'ஏயாமையின்' நிட்டை யின்பங் கெடும் எனக் கொள்ளக் கிடந்தமை காண்க. இனித் துவிதம் அத்துவிதமென்னுஞ் சொற்கள் சைவர்க்கே உரியனவாம் என்கிறார் நம்புலவர். ஆம்; சரியையாதி புரியும்போது துவிதமும் சிவத்தோடு கலந்தபோது இவர் கொண்டபடி அத்துவிதமும் இவருக்கே யுரியனவாம். ஆனால் மூலபத்திராதிபருக்கு தேகாதி பிரபஞ்சம் பிரமத்தினிடத்து ஆரோபமாய்த் தோன்றுகின்றமையால், முத்தியில் அது தானல்லவென்று ஒதுக்கி, எஞ்சின பிரக்ஞான சொரூபமே தானாக யாதொரு அந்நியப் பொருளின் சையோகமின்றி அனுபவிக்கும் இன்ப நிலையே அத்துவித மாகையால் அவ்வத்துவிதம் மூலபத்திராதிபர்க்கே யுரியதாமென்க.

## பூர்வபக்ஷம்.

7-வது. (1) "இவர் சரியையாதிகள் சாலோகாதிகளைத் தருமென்றார். (2) அது எம்மவரிடங் கற்ற பாடமாம். (3) சாலோகாதிகள் சிவனை வழிபடும் பக்குவர்கள் அடையும் பெறும் பேறுகளாம். (4) இவற்றைச் சிவனை நாயகனாக அடையாத ஜீவாத்ம வாதிகள் பெற்றுப் பிழைப்ப தெங்கே? (5) இன்னோர் சாலோக மாதிகளைக் குறை கூறுவது ஜன்ம தரித்திர னொருவன் குபேரனது பதவியைக் குறை கூறுவது போலாம். (6) இவ்வறிஞர் ஜீவாத்ம

போதிதமாகிய தமது ஏகாத்ம வாதத்தாலடையத்தக்கது புருஷதத்துவப் பிராப்தியேயாம்.(7) இவர் "சதசத் விலக்ஷண அநிர்வசனீயப் பொருள்" என்னும் வசனத்தொடரொன்று கற்றுக்கொண்டதைச் சாலோகாதிகளின் மேலேற்றி சந்தர்ப்பமின்றிப் பேசிச் சதுரிழந்தார் கண்டீர். (8) இவரெழுதியதின் பொருள் ஜீவப் பிரமமாகிய இவருக்கே தெரியாதென்க. (9) இவருக்குச் சரியை கிரியைகள் என்றெழுதும் படிப்பின்றிச் சரிகை கிரிகை என்று எழுதினர். (10) அதைப்பார்த்த சிறுவர்கள் வெள்ளிச் சரிகையா? பித்தளைச் சரிகையா? செம்புச் சரிகையா என்று பரிகசிக்கின்றனர். (11) சரியையாதிகளின் பேரையே நன்கு பிரஸ்தாபிக்க வறியாத இந்தப்பண்டிதர் அந்தச் சரியையாதிகளைத் தூஷிக்கவந்தது ஆச்சரியமேயாம்.(12)இனிச் சரியையாதிகள் சாலோகமாதிகளைக்கொடுத்தலால் வருந்தாழ்வென்னை? (13) சரியையால் ஸாயுஜ்யம் வருமென்று யாரேனுஞ் சொன்னதுண்டா? (14) ஞானத்தினாலன்றோ ஸாயுஜ்யப் பேறு கைகூடத்தக்கது (15) இந்த நியதியைக் கூறுமுண்மை முடிவை இவர் தமோறிப் பேசியது விவேகத்தின்பயனுமா? (16) இவரது ஞானம் பசுஞானமேயாகையால்,பதி ஞானத்தின் பண்பை யிவரறியாதது உசிதமேயாம். (17) சிவாலயத்தில் புல் கல்லுகளைச் செதுக்கித்தொண்டு புரியுஞ் சரியையினின்ற வொரு சத்புருஷனது பாதசேவைக்கு ஏகாத்மவாத ஞானி யொருவனாவது எளிதிற் பிராப்தமாகத் தக்கதன்றாம். (18) அநேக கோடி ஜன்மங்ளிற் றடித்த பசுஞான முதிர்ச்சியாலாய போகந்துய்த்தொழிந்து பரிபாகங்க கூடியபோதே பிராப்தமாகத் தக்க தொன்றாம். (19) "வேதச் சிரப்பொருளை மிகத் தெளிந்துஞ் சென்றாற் சைவத் திறத்தடைவ ரிதிற் சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர் என்பதோத்து. (20)விரிக்கிற் பெருகும். (21) இவ்வள வருமையான சைவ தர்மங்களை ஹேயமாகக்கொண்ட பூர்வபட்சியினது பாவத்துக்கே வருந்துகின்றனர் பெரியோரென்க. நிற்க."

## சித்தாந்தம்.

(1) ஆம்; அங்ஙனந்தான் மூலபத்திராதிபர் கூறுகின்றார். (2) இவ்வுண்மை "முக்திகோபநிஷத்து" "நிராலம்போபநிஷத்து" களில் பூரணமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையினால் நம் பண்டிதர் குருக்தாரிடங் கற்கவேண்டிய ஆவசிக மின்று. (3) இது மெய் தான். தன்னையும் சிவனையும் பின்னமாய் நோக்கும் அநுபவத்தின் பயனே சாலோகாதிகள். ஆகையாற்றான் அப்பதவிகளை அநித்தமென வேதம் கூறுகின்றது. அவ் வநித்தபதவிகட்குச் சாதனமாகச் சரியையாதிகள் கூறப்படுகின்றமையால், அவை நித்திய மோக்ஷத்தைப் பயப்பன வன்றென்று கூறினர் நம் மூலபத்திராதிபர்.(4) ஆம்; இப்பிழைப்புப் பிழைக்க அத்வைதிகட்குத் தெரியாதுதான். சகல அவஸ்தைகளுங் கடந்து திரிபுடியிறந்து சிவமாய்நிற்கும் ஜீவன்முத்தி நிலையில் தனக் கன்னியப் பொருளின்மையானும், அப்போது தானே சத்து சித்து ஆனந்தப் பொருளாய் எஞ்சுவதாலும் அந்த நிலையே அகம்பிரமமெனச் சுருதியாலும் அநுபவத்தாலும் துணிந்திருக்கின்றமையாலும் இப்பிழைப்பு அவர்கள்பால் அமையாது தான்.

அகம்பிரவாதம் வேதாகம இதிகாச புராணாதிகட்கு உடன்பாடென்பதற்குப் பிரமாணம் வருவாறு:—

### எசுர்வேதம் கைவல்லியோபநிஷத்.

அது பிரமமே; அது நானே என்றறிந்தால், சகல பந்தத்தினின்றும் விடுபடுகிறுன். சாட்சியாயும் சின்மாத்திரமாயு மிருக்கிற சதாசிவன் நான்தான். அந்த அத்வயமான பிரமம் நானே.

### சாமவேதம் மைத்ரேயோபநிஷத்.

அதிலிருக்கிற ஜீவனுனவன் சிவனே.

### ருக்வேதம் ஆத்மபோதோபநிஷத் 6-வது உபதேசம்.

அந்தப் பிரமமே நானென்று உச்சரிக்கவேண்டியது.

### சுக்கில எசுர்வேதம் பைங்களோபநிஷத்.

நானே பிரமமென்றிருக்கிறது மகாத்மாக்களுக்கு மோக்ஷ, எதுவானது. நானே பிரமமென் றறியாதவனுக்கு முத்தியுண்டாவதில்லை.

### எசுர்வேதம் வராகோபநிஷத் 2-வது அத்தியாயம்.

தேகாத்ம ஞானத்திற்கு விரோதியான ஞானம் ஆத்மாவினிடத்தில் எவனுக்கு உண்டாகிறதோ, அவன் விரும்பாவிட்டாலும் மோக்ஷமடைகிறுன்.

இன்னுமனேக பிரமாணங்களாலும் காரண காரிய வாதவிவர்த்த பட்ச யுக்தியாலும் மேற்கூறிய சித்தாந்தம் நிறுத்தப்படு மென்க. சோமசுந்தர நாயகரும், அவரபிமானிகளும் பதி, பசு, பாசங்கள் அநாதி நித்தியமெனக் கூறி முத்தியினும் மும்முதலும் வியாபகம், வியாபதி, வியாப்பிய சம்பந்தமாகச் சமுத்திரம், அதில் ஜலம், அதனுளுப்பும்போல் என்று பேசுகின்றுர்க ளன்றே? அந்தச் சமுத்திரமென்னும் சொற்கு ஜலமில்லாவிட்டால் பொருளே இல்லாமற் போவதுபோல் ஜீவனில்லாவிட்டால் சிவனேயில்லாமற் போவார். இதனுல் ஜீவனே உபாதான காரணமென்று சொல்லக் கடமைப்பட்டு அதுகாரணமாக இவர் பக்கத்தினரே ஜீவாத்மவாதிகளெனக் கரதலாமலகம்போல் வெளிப்படுகின்றுரென்க. (5) அத்வைதிகள் ஜந்மதரித்திரர்கள்தான். முத்திநிலையில் ஏகப்பிரமத்துக்கு மற்றொரு பெயராகிய ஏகாத்துமாவாக விளங்கி, அவ்வேகாத்துமாவுக்கு அ-னியமான தன தானிய மனைவி மக்களாதி ரூபமாயுள்ள பிரபஞ்சத்தை மித்தையென்றெதுக்கி, மாயாசம்பந்தமுள்ள ஞாதுரு ஞானஞேய துவிதப் பிரபஞ்சம் தம்மிடம் விளங்காதவாறு பிரகாசிக்கின்றவராகவின், அவர்கள் தரித்திரர்கள்தான். நம்பண்டிதரோ மாயையும் அதன் காரியமுமான சகல சுகப் பொருள்களையுந் தம்பால் எக்காலத்து முடையவராகவின், இவர் குபேரரேயாம். அன்றி அவர் அடையும் பதவியும் குபேரசம்பத்தேயாம்.

(6) இது மூலபத்திராதிபர் கோட்பாடன்று. அவர் எஞ்ஞான்றும் ஜீவனைச் சிவமெனும் பொருள்கொள்ளும் ஆன்மாவோடு தாதாத்மியம் சொல்வதேயில்லை. இது முன்னரே விரித்துரைக்கப்பட்டது; (7) சாலோகாதிகள் மிச்சையென்பது மூலபத்திராதிபர் கூற்றன்று.

நம் மூலபத்திராதிபர் கூறுவது வேதாதிகளின் கூற்றாகையானும், அவ் வேதாதிகள் சகல வித்தைகட்கும் ஆசிரயமாகையானும் நம் மூல பத்திராதிபர் ஷை வித்தைகட் கியையவே சொன்னவராகின்றார். இது சற்பிரமாணங்களின் துணிபென்று முன்னரே கூறியிருக்கின்றோம். (8) இது மெய்யா யிருக்கலாம். இதன் பொருளை நம் பண்டிதரிடம் நேரில் கேட்டுத் தெரிந்துகொள்ளத்தக்கதே. (9) ஆம்; இது மெய்தான். (10) நம் மூலபத்திராதிபர் 'சரியை' என நம் பண்டிதர் கொள்வதைச் 'சரிகை' என எழுதுவதைப் பார்த்துச் சிறுவர்கள்தான் பரிகாசிப் பார்கள். மற்றும் நிகண்டு அகராதிகள் எழுதிய தமிழ்ப் பாவலர்கள் இச் "சரிகை" யெனும் பதத்தை எடுத்தாண்டதற்கு நம் மூலபத்திரா திபரைப் புகழுவார்கள். (11,12) இது இவருக்குத்தெரியாது போலும். சாலோகாதி யழியத்தக்கவை யாகலின், அநித்தமெனக் கூறுவர் சான்றோ ரென்க. (13) அப்படி உள்ளபடி இருந்தால் சரியையாதி களை யனுட்டிக்கச் சொல்லிப் பிரசங்கத்தில், நாயகர் அறிவுறுத்தி னது கள்ளப் பிரசங்கமேயாம்போலும், (14,15) இது மூலபத்திராதி பர் தடுமாறிப் பேசியதாகாது. நம்பண்டிதரே அங்ஙனம் பேசிய தாகும். தாயுமானார் "வேதமுடனாகம புராண இதிகாசமுதல்" என் னும் பாட்டில் சரியையாதிகள் துவிதமென்றும், துவித ஞானமே அத் துவித ஞானத்தை யுண்டுபண்ணும் ஞானமாமென்றுங் கூறினமை யானென்க. துவித ஞானத்தோடு தாதான்மியமான சரியையாதிகளை அநுட்டிப்பதினாலே, அத்துவிதமாகிய மோக்ஷ இன்பத்தை யடைய லாம் என்று நாயகரவர்கள் தம் பிரசங்கத்தில் பிரஸ்தாபித்தா ரன்றோ? அதற்கு மாறாக இப்போது நம் பண்டிதர் துவித ஞானத் தின் முதற் கூறாகிய சரியையால் ஸாயுஜ்ஜியம் வருமென்று யாரே னும் சொன்னதுண்டோ என்கின்றார். இதனால் இவர் மாறிப் பேசினா ரென்பது வெளிப்பட்டமை காண்க. இவர் நியதி யல்லாததை நியதியெனக் கூறி அது உண்மையென்றும் முடிவென்றுந் தடுமாறிப் பேசியது விவேகத்தின் பயனாமா? (16) இது சுத்த பிசகு. பசுவைச் [illegible]ணதுபோலிப் பொருளென மூல பத்திராதிபர் கூறியுள்ளா ராகலின், அதன் ஞானத்தால் நிகழும் இன்பமும் அங்ஙனமேயாம். நம் பண்டி தருக்கோ பசுவும் நித்தியம், பாசமும் நித்தியமாகையாலும் அதிலும் பெத்தத்திலும் முத்தியிலு மாகையாலும் இவரது பசு ஞானம் இவரை இங்கும் விட்டிலது, அங்கும் விட்டிலது. ஆகலின் பதி ஞானம் இவரு க்கு இல்லவே யில்லை. பெத்தத் தசையில் இவர் பதியின் உண்மை யும் அவர் இலட்சணங்களும் சத்தப் பிரமாணத்தா லறிந்தார். அநு பவமில்லை. முத்தித் தசையிலும் இவர்பாடு அந்தரந்தான். "உனைத் திரும்பிப் பாராதே" "முன்னிலைச் சுட்டொழிந்து" முதலிய வாக்கியங்க ளால் முத்தித் தசையிலும் இவர் சிவத்தைப் பார்ப்பதற்கும் அறிதற் கும் அநுபவித்தற்கும் இடனில்லது. ஆதலால் இவருக்குச் சிவத் தின் பிராப்தம் இங்கு மில்லை, அங்கு மில்லை. இவர் பாடு திரிசங்கு

சொர்க்கந்தான். ஆகலின் இவருக்கு இருபாலு முள்ளது பசு ஞானமும் பசு அனுபவமுமே. இப்படிப்பட்ட இவர்க்குப் பதிஞானம் யாங்குளது? (17)இது மெய்தான். அங்ஙனம் புரிபவர் சரியையாள ராகையால் அத்தொழில்களை விலக்கிய ஞானிகள், அதிலும் பிரம ஞானிகள் அன்னோர் பாதசேவைக்குப் பிராப்தமாகத் தக்கவ ரன்றுதான். இது மிகச் சரியே! நம் பண்டிதர் மிக நன்று சொன்னார்! இனி றியில் புல்கற்கள் செதுக்குபவர் பாத சேவைக்கும் ஷை பிரம ஞானிகள் பிராப்தமாகத்தக்கவ ரன்றும். இக்கருத்து மிக நன்றமைந்துள்ளது! (18) பசு ஞானம் இவருக்கே உரியதென முன்னரே கூறினோ மாகையால், அஞ்ஞான முதிர்ச்சியாலாய போகந் துய்த் தொழிந்து பரிபாகங் கூடியபோது இவருக்கே அச்சரியையாளன் சேவை பிராப்தமாகுக. (19) இதில் 'வேதச் சிரப்பொருளை மிகத் தெளிந்தும் சென்றூற் சைவத்திறத்தடைவ ரிதிற் சரியை கிரியா யோகஞ் செலுத்திய பின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்' என்ற (பொதுப் பிரமாணமின்றி) இவர் பக்கத்தினர் கூறிய பிரமாணச் செய்யுளை மேற்கோளாகக் காட்டினார். சரியை யாதிகள் இயற்றிச் சிவனடியைச் சேர்ந்தவர்: அவ்வடியோடு சையோகித்தவராகையால் விபக்தராவர். எங்கெங்கே சையோக முண்டோ அங்கங்கெல்லாம் விபாகமுண்டென இவரறிந்திலர் போலும். நம் பண்டிதர் சாதிக்க வந்த முத்தி நம்மூல பத்திராதிபருக்கு நித்தியா நித்திய வஸ்து விவேகத்தால் அசத்தாய் முடிந்தமைக்கு விசன முறுகின்றேம்! இனி அத்வைத ஞானத்தை அடைவதற்குரிய சாதனங்கள் சரியை முதலியனவென்று கூறியது பிசகென்றும், அது அடைதற்குரிய சாதனம், சாதன சதுஷ்டயமேயென்றும் அறிந்திடுவாராக. இதற்குப் பிரமாணம்:—

பிரமகீதை கைவல்லிய உபநிடதம்

நனிவேதநா லுமுகமாகமேவி நளினாலயத்தி லுறைவா
னனுபோகமாகவருளாலறிந்தவவரேபரத்தையறிவார்
தனிமேவுவார்கள்பெறுஞானமாகுமிதுசாதனங்களுடைய
முனிமேவுவான்தெனுமாறுவேதமொழியோதுமாறுமொழிவான். (௯)

பதவிகள் யாவும் சத்தல்ல வென்பதற்குப் பிரமாணம்:—

பிரமகீதை முண்டகோப நிடதம்.

மெய்ம்மைவிரதந்தவம்விழுப்பமுதலாகுஞ்
செம்மைதருநல்வினைகள்செய்தனுபவிக்கு
மிம்மைமறுமைப்பயனனைத்துமிறைவன்பாற்
பொய்ம்மையறவேநிகழினுங்கனவுபோலாம். (௧௫)

(20)நம் பண்டிதர் இன்னும் விரிப்பரேல் இவரது ஆபாச பத்திரிகை இன்னும்அதிகமாய் விரியுமென அஞ்சியே இவர் விடுத்தாரென்க. இது புத்தி சாதுரியமே! (21) மூலபத்திராதிபர் சைவ தர்மங்களை ஹேயமாகக் கொள்ளவில்லையே. என் இல்லாததைப் பேசவேண்டும்? அவர்

சொன்னதெல்லாம் மோக்ஷப் பேற்றிற்குச் சாதனம், சாதன சதுஷ்டயமே யொழியச் சரியையாதிக ளல்லவென்றும், ஷை சரியையாதிகள் பதவியைப் பயப்பனவென்றுமேயாம். இப்படி அவர் சொன்னதற்குப் பிரமாணமுங் காட்டினேம். நம் பண்டிதரும் சரியையாதிகள் பதவியைக் கொடுக்கு மென்றே 7-வது பத்தியில் ஒப்புக்கொண்டே பேசியிருக்கின்றார். இங்ஙனமாக ஹேயம் எங்கிருந்து வந்தது? வேதசாஸ்திர விரோதமாக இல்லாத மாயையை உள்ளதெனக் கொண்டது போல மூலபத்திரிகையி லில்லாத ஹேயத்தை யுள்ளதென நம் பண்டிதர் கொள்ளுகின்றார்போலும்.

பூர்வபக்ஷம்.

8-வது (1) இவர் ஆகாயத்தில் நீலம் சட்டி கூடாரம் அத்தியாசமாகத் தோன்றியதென்றார். (2) இதுவும் அசங்கதமே. (3) இவருக்குத் தோன்றிய லபீதாதி விகாரங்கள் இவரது கட்புலனதேயாம். (4) அவ்வாறு கவரத்தக்க பல்வேறுதன்மை கதிரோனது சந்நிதியிற்பட்ட கண்ணுக் கியல்பாகவே யமைந்துள்ளதாம். (5) இவர் கண் காது முதலிய துணை யொழிந்து ஆத்மாவாகத் தனித்துத் தன்னிடத்தில் அத்யாசமாக வொரு பதார்த்தத்தைக் காண்பதுண்டாயினன்றோ இவரது மதம் தலை தூக்கும். (6) இவருக்குப் பூர்வமே விஷயமாயிருந்த நீலாதிகளையும், சட்டி கூடாரங்களையும் ஆகாயத்தில் பின்னர் உருவித்துப் பார்த்தல் இவரது போலி அத்துவிதத்திற்கு உபகாரப்படாதென்க.''

சித்தாந்தம்.

(1, 2, 3, 4) கண்ணின் தோஷத்தால் அங்ஙனம் தோற்றுகிறதே யொழிய அத்தோற்றம் ஆகாயத்தி லில்லையென்று சொல்வதாய் வெளியாகிறது. அங்ஙனமாயின், காமாலைகொண்டவன் கண்ணிற்குச் சகல பொருள்களும் மஞ்சளாய்த் தோற்றுவதுபோல் எல்லாப் பொருளும் எல்லோருக்கும் நீலமாயன்றோ தோற்றல்வேண்டும்? அங்ஙனம் தோற்றாமையின் நம் புலவர் சொல்வது அநுபவவிரோதம். கட்புலன் தோஷத்தால் நீலமும் சட்டி கூடாரமும் தோன்றுகின்றன வென்பதற்கு ஏது என்னை? கண்ணின்கண் தோஷம் நீங்கியபின்னர் அவை யில்லாமற் காணப்படுகின்றனவா? இவர் கூறும் கண்ணின் தோஷம் இவருக்கென்றேனும் நீங்கி நீலமும் சட்டிகூடாரமு மில்லாத ஆகாயங் காணப்பட்டதா? எவருக்கும் மில்லாத அனுபவம் இவருக்கு மாத்திரம் உண்டாயிற்றுகொலோ? நாம் கூறுவது யாதெனின், பார் கண்டாலுங் காணவிட்டாலும் ஆகாயம் நீலமாயும் சட்டிபோலும் கூடாரம்போலும் தோற்றுகின்றதென்பதேயாம். ஆகாயத்தின்கண் அவ்வித சத்தி யின்றேல் நாம் எவ்வாறு நோக்கினும் ஷை நீலாதிகள் தோன்றா மாட்டாவென்க. நமது கண்ணின் குற்றத்தால் தோன்றுவ தன்மையாயின், மஞ்சள் காமாலை கொண்டவனுக்கு எப்பொருளும் மஞ்சளாய்த் தோற்றுதல்போல எப்பொருளும் நீலம் சட்டி கூடாரங்களாய்த் தோற்றுதல் வேண்டும். அங்ஙன மின்மையின் இவர் கூற்றுக் கூற்றன் கூற்றாய் முடிந்ததென்க. (5) இது மிக விந்தை!

ஆத்துமாவாகத் தனித்த தன்னிடத்தில் ஒரு பொருளும் காணுமை யாற்றான், அங்ஙனம் தனியாதபோது கண்டபொருளெல்லாம் அத்தி யாசமென்று நம் மூலபத்திராதிப ருரைக்கின்றார். ஆத்மாவாகத் தனி த்தபோது யாதா மொரு பதார்த்தம் காணப்படுமாயின், அப்போத ன்றோ இம் மூலபத்திராதிபர் மதம் தலை தூக்காது ? பிறர் சித்தாந்த த்தை யறியாது கண்டிப்பவருக்கு நம் புலவர் என்ன பேர் கொடுப் பாரோ, அப்பேரை யிவர் இப்போது தரித்துக்கொள்வாராக. (6) ஆன் மாவாகத் தனித்தபோது ஆகாயமே இல்பொருளாகும்போது அதில் எங்கே சட்டி கூடாரங்களை வருவித்துப் பார்ப்பது ? இவர் சொல்வ தில் இன்னும் ஒருவிந்தை யிருக்கிறது! நீலாதிகளையும் சட்டி கூடார ங்களையும் ஆகாயத்தில் பின்னர் வருவித்துப் பார்த்தல் என்கின் றாரே. நீலாதிகளும் சட்டி கூடாரங்களு மின்றி இவர் ஆகாயத்தைப் பார்த்திருப்பார்போலும். அங்ஙனம் தனி ஆகாயம் இருந்தா லன்றோ அதில் நீலாதிகளை வருவித்துப் பார்க்கலாம்?

பூர்வபக்ஷம்.

9-வது "(1)இனி யிவரது ரஜ்ஜு சர்ப்ப திட்டாந்தத்தை நாயகரவர்கள் தூஷித்ததாகக் கூறினர். (2) அந்தத் தூஷணை இதுவென்று விளக்கினாரில்லை. அப்படி விளக்கிக்காட்டினால் அந்தத் தூஷணத்திற்குத் தாம் பரிகாரஞ் சொ ல்ல முடியா தென்பது நோக்கி வழவழ வென்று விட்டார்போலும். (3) இதற் கிடையில் ''சாதிர்ஷபம்'' என வொருசொல்லைத் தப்பா யெழுதி அடிக்கடி குறுக்கே கொண்டுவந்து போட்டு மகிழ்கின்றார். (4) அந்தச்சொல்லை அவர் விநி யோகித்த விடங்களுக்கு அவரேதான் பொருள் சொல்லவேண்டும். (5) வெறுங் குழறு படையென்பதே எமது கருத்தாம். (6) இவ்வளவு தெரியாமையோடு கூடிய இவர் நாயகரவர்களைச் சுட்டி அவர் சாஸ்திர விசாரமில்லாதவரென்று பேசியது இவரது தற்போதக் கொழுமையையே காட்டியதென்று ஒதுக்கு மென்க. இனி நாயகரவர்கள் இவரது ரஜ்ஜுசர்ப்பதிட்டாந்தத்தை யலைத்த விதம் வருமாறு"

சித்தாந்தம்.

(1,2) இவ்வாக்கியங்களுக்குச் சித்தாந்தம் பத்தாவது பத்தில் காண்க. (3) 'சாதிர்ஷயம்' என்னுஞ் சொல் அச்சுப் பிசகு என்று அறிக. (4) சாஸ்திரப்பழக்க முள்ளவரானால் நம்பண்டித ரிதன்பொ ருளை ஸ்காந்தபுராணத்தின் ஆறு சம்ஹிதைகளி லொன்றான சூதசங் கிதை ஞானவைபவ முரைத்த வத்தியாயம்

"சாதுரிசியஞானத்தாற்றகவுதித்திடுமென்ஞான
மேதகவுணர்ந்தோர்யாரும்விளங்குபமானமென்ப
ரோதனுபபத்திஞானத்தாலேயுற்பத்தியாகு
மாதரவுடையஞானமருத்தாபத்தியெனச்சொல்வர்."

என்னுங் கவியால் ஏன் அறிந்து தெளிந்துகொள்ளக்கூடாது (5) நம்பண்டிதருக்குத் தெரியாதவையெல்லாம் அவருக்குக் குழறு படையேபோலும். (6) மேற்கூறிப்போந்த பிரமாணங்கட்கு இவர் பேசியது மாறுபடுகின்றமையானேயே நாயகரது சாஸ்திர விசா

மில்லாமையும், நம்மூலப்பத்திராதிபருக்குத் தற்போதக்கொழுமை யில்லாமையும், சாஸ்திரகொழுமை யுண்மையும் நன்கு வெளிப்படும்.

### பூர்வபக்ஷம்.

### "ரஜ்ஜுசர்ப்பதிட்டாந்த அழிவு."

10-வது "கயிறு எப்படி யிருந்ததோ அப்படியேயன்றோஅரவின் றோற்றத்தை நாம் காண்கிறோம். கயிற்றில் அரவின் றோற்றமன்றிக் குதிரையின் றோற்றம் மயிலின் றோற்ற முதலியவைகளை யாராவது காண்பதுண்டா? இங்ஙனமாகப் பிரமத்தினிடத்தில்ஒருவிதமானதோற்றத்தைப் பிரசங்கிப்பதன்றி இருவிதமான (விஜாதியான) தோற்றத்தைப் பூர்வபக்ஷிகள் பிரசங்கிப்பதென்னை? கயிறு நீளமாயிருந்தால் பாம்பு நீளமாகத்தோன்றும். கயிறு சுருட்டிக்கொண்டிருந்தால் பாம்பு சுருட்டிக்கொண்டிருந்தவாறு தோன்றும். கயிறு வெள்ளையாயிருந்தால் அது வெள்ளைப்பாம்பாகத் தோன்றும். கயிறு கறுப்பாகவிருந்தால் அது கறுத்தபாம்பாகத்தோன்றும். கட்டையினிடத்தில் கள்வன் தோன்றுவன். கட்டையினிடத்தில் பாம்பு தோன்றுமா? கயிற்றினிடத்திற் பாம்பு தோன்றியவாறு அதனிடத்திற் கள்வன் றோன்றுவனா? எது எப்படி இருக்கிறதோ அதனிடத்தில் அப்படியே தோற்றமுண்டாயிடுதல் அநுபவமாகவும் இதற்கு விரோதமாக நிர்விகாரமாகிய பிரமத்தினிடத்தில் விகாரவடிவங்களாகிய சிற்சடப்பிரபஞ்சத் தோற்றமாகக் காணப்படுகின்றது என்னும் அஸங்காத்மவாதம் எங்ஙனே மணம் பெறும்;அன்றியும் கயிறு குட்டையாயின் சிறியபாம்பும் நெட்டையாயின் பெரிய பாம்புந் தோற்றமாம். கயிறு எவ்வளவு பரிமாணமோ அந்த அளவுக்கதிகமாகப் பாம்பின் றோற்ற மூண்டாகாது. இந்த உபமானத்தால்பிரமத்தில் தோற்றமாத்திரமாய் விளங்கும் சிற்சடப்பிரபஞ்சம் பிம்மத்தின் பரிமாணத்தளவாயே விளங்காநிற்கும். இதனால் பிரமம் எவ்வளவு பெரிது என்று கேட்பார்க்கு உலகம் எவ்வளவு பெரிதோ அவ்வளவு பெரிதென்று விடை பகர்வதே இவரது தலையெழுத்தாய் முடிந்தது. பிரமம் எப்படி யிருக்குமென்று கேட்பார்க்குப் பிரபஞ்சம் எப்படி நாநாத்வமாகிய விகாரமா யிருக்கிறதோ அப்படி யிருக்குமென்றே யன்றோ இனி யிவர் விடை யிறுத்தல் வேண்டும்; இவ்வனுபவத்தால் உலகத்துக்குப் பெரிதாகாமல் (அதீதப்படாமல்) இவ்வளவென்று அளந்தறியத்தக்க நிலையிற் கண்டப்பட்டு விகாரமாய் விளங்கும் பிரமத்தை அகண்டம் பரிபூரணம் நிர்விகாரம் என்று இவர் பிதற்றுவதை எந்த வித்வான்க ளொப்புவார்கள்; பிரமத்தைப்போலவே உலகமும் உலகத்தைப்போலவே பிரமமும் ஒரே யளவினவாய் விளங்குதல் ரஜ்ஜுஸர்ப்ப திருஷ்டாந்தத்தாலறிந்த விவேகிகளது ஸதஸில் இந்தப் புத்திமான் பிரமம் அகண்டம் பிரபஞ்சம் கண்டம் என்று சொல்லித் தப்பிதுக்கொள்ளும் விதம் யாதோ அறிகிலம். இவரது விவர்த்தவாதம் இவரைத் தெருவிலே தியங்கவிட்டு அசர்த்தவாதமாய் முடிந்தது இவரதிர்ஷ்டமேயாம். இதற்குச் சமாதானங் கூறுவதொழிந்து ஏகதேச வுபமானங் கூறினேமென்று தட்டழிந்து தடுமாறிப்போகாமல் தமது மதத்தைக் காத்துக்கொண்டு க்ஷேமமடைவாராக."

### சித்தாந்தம்.

இந்தப்பாகம் "நாகை நீலலோசனி"யில் தினகரரென்பவர், நாயகர் கூற்றாக விவகரித்ததை நம் புலவர் எடுத்தெழுதியதாகத் தெரிகிறது. ஆதலால் இதனை நாயகர் கூற்றாகவே விசாரிப்பாம். 1, 4, 5,

6, 7 வாக்கியங்களால் தோற்றமாய பாம்பினிடத்தில் என்னென்ன தருமம் புலப்படுகின்றனவோ, அவையெல்லாம் கயிற்றினிடத்தி லுளவாக வேண்டு மென்கிறார். இங்ஙனங் கூறுவதால், அதிஷ்டானப் (யதார்த்தம்) பொருளுக்கும் ஆரோபப் (தோற்றம்) பொருளுக் கும் சாதிரிசியம் (ஒப்புமை) இருத்தல் நியமம் என்பதாய் வெளி யாகிறது. மேலும் 2, 8, 9 வாக்கியங்களால் ஒப்புமை யில்லாவிட் டால் ஆரோபம் இல்லையென்று கூறுவதாயும் வெளிப்படுகின்றது. இவ்விரண்டு சித்தாந்தங்களையும் சிறிது ஆழ்ந்தாலோசிப்பாம். நாயக ரவர்கள் விவகரித்த வண்ணம்

| பாம்பினிடத்தில் | கயிற்றினிடத்தில் |
|---|---|
| நீளம் | நீளம் |
| சுருட்சி | சுருட்சி |
| வெண்மை | வெண்மை |
| கருமை | கருமை |
| குறுமை | குறுமை |
| நெடுமைகளும், | நெடுமைகளும் |

தோற்றுகின்றன; ஆனால்,

| | |
|---|---|
| தலை அசைவு | × |
| வால் அசைவு | × |
| நகர்தல் | × |
| படமெடுத்தல் | × |

முதலிய பாம்பினிடத்துத் தோற்றுந் தருமங்கட்கு ஒப்புமையாகக் கயிற்றினிடத் தொன்றுமில்லையே. இதற்கு நாயகர் யாது கூறுவர்? ஆனமட்டும் பார்ப்போமென்று கூடியவரையிலும் சாதிரிசியம் சொல்லி அச்சாதிரிசித்தை ஆரோபப் பிரபஞ்சத்தினிடத்தும் அதிஷ்டானப் பிரமத்தினிடத்தும் ஏற்றி அத்வைதவாதத்திற்குக் குறை கூறப் பார்க்கின்றார். ஆனால் அது அவைகட் கிடமில்லாமற் போகிறது. இச்சித் தாந்தந்தான் இப்படி யாயிற்றே; இனி மற்றொரு சித்தாந்த மேனும் சோதனைக்கு நிற்கின்றதா எனப் பார்ப்போம். அவர் கூறுவதாவது ஒப்புமை இல்லாவிடில் ஆரோபமு மில்லை என்பது. இச்சித்தாந்தமும் மேற்படி சித்தாந்தம்போற்றான். எங்ஙனமெனில், கானலிலே ஜலந் தோன்றுகிறது. கானல் யதார்த்தப்பொருள்; ஜலம் தோற்றப் பொருள். இவ்விரண்டு பொருள்கட்கும் ஒப்புமை எங்குளது? ஆகா யம், நீலவர்ண மாகிய இவற்றுள் ஆகாயம் உண்மை; நீலவர்ணம் தோற்றம். இவ்விரண்டிற்கும் ஒப்புமை எங்கே? மனம், சொப்பன உலகு ஆகிய இவற்றில் மனம் உண்மை, உலகம் தோற்றம். இவ் விரண்டிற்கும் ஒப்புமை எங்கே? இந்திரசால சத்திக்கும் இந்திர சாலப் பொருள்கட்கும் ஒப்புமையுள்ளதெனக் கூற முன் வருவாரா? ஆகலின், மேற்கூறிப்போந்த உவமானங்களால் அதிஷ்டானப் பொரு

ளுக்கும் ஆரோபப் பொருளுக்கும் சாதிரிசியம் இருக்கவேண்டுமென்கிற நியம மில்லை யென வறிக; இருந்தாலும் அது ஏகதேச அமைதி எனவும் அறிக. இதனுல் அங்ஙனம் ஒப்புமை இல்லாவிடில் ஆரோபமில்லையென்று கூறுவது கூடாதெனல் திண்ணம். ஆகலின் தோன்றுகின்ற பிரபஞ்சத்திலுள்ள தருமங்கள் பிரமத்தினிடத்தி லிருக்கவேண்டுமென்கிற நியமமில்லை.பிரபஞ்சத்திற்கும் பிரமத்திற்கும் ஒப்புமையின்மைபற்றி ஆரோப ங்கூடாதென்பது கூடாதென் றறிக. இவ்வுவமானங்களை விளக்கிக் கூறின், "சைவசித்தாந்த சண்டமாருதமரகிய நாயகர்: சைவ சித்தாந்தத்திற்குச் சண்டமாருத மாவா ராகலின், அவைகளைக் கூருது விடுத்தார் போலும். யாவரேனும் மேற்கூறிப் போந்த இரு சித்தாந்தங்களையும் மனதி லமைத்துக்கொண்டு, இந்தப் பத்தியிலுள்ள ஒவ்வொரு வாக்கியத்தையும் பரியாலோசிப்பரேல், அதில் அமைந்துள்ள உண்மையினை யுணர்ந்து சித்தசமாதானமாவர். மேற்கூறிப் போந்த நியாயங்களால் நம் நாயகர் விவர்த்த வாதத்தைப் பூர்வபட்சம் செய்ததாகத் தெரிய வில்லை. விவர்த்த வாதத்தால் ஸ்தாபனமாகும் சித்தாந்தம் யாதெனில் சத்துப்பொருளாகிய கயிற்றில் சத்துப்போலிப் பொருளாகிய பாம்புத் தோற்றுதல் போல, சத்துப் பொருளாகிய சிவத்தினிடத்தில் சத்துப்போலிப் பொருளாகிய பிரபஞ்சம் தோற்றுகிறது என்பதேயாம். பிரபஞ்சமும் மாயையும் அசத்தென்பதற்குப் பிரமாணங்கள் :—

யசுர்வேதம் சர்வசாரோபநிஷத்.

மித்தை யெது? இல்லாத பிரபஞ்சத்தை ப்ரம்மத்தில் ஆரோபிப்பது?

மாயை என்பது யாது?

எவள் வாஸ்தவத்திலில்லையோ அவள்தான் மாயை. அவள் சொருபம் அஞ்ஞானம்.

சூதசங்கிதை பஞ்சாக்கரம்.

பரசிவசொருபத்திற்கன்னியமாயுள்ளவெல்லாம்மித்தையாவதினுலேயே. (க)
அனகற்கன்னியமாயவைபொய்யாகிப்போதலாலே. (கஉ)

கூர்மபுராணம் சாங்கிய யோகம்.

ஆதலால்பிரமமொன்றேநித்தியம்அலகைத்தேரிற்
பேதுறத்தோன்றும்நீரிற்பிரபஞ்சமருண்டுதோன்றும். (உரு)

பிரமகீதை முன்சொல்லிய உபநிடதங்களின் அர்த்தத்தின் தோதப்பு.

இடையிலோர்மாயையுண்டெனவெண்ணுமேல்
கடையதேயாகும்அவன்கற்றகல்வியே. (எ)
மாயையென்ருென்றுண்டாகமதிப்பதுமனனமல்ல. (அ)

இன்னும் அநேக பிரமாணங்கள் முன்னரேயே சொல்லப்பட்டிருக்கின்றன. நம் நாயகர் பிரபஞ்சம் காரியமாகையால் அசத்தென்றும், காரியம் அசத்தானுலும் அதற்கு முதற்காரணமா யுள்ள மாயை மாத்திரம் சத்தென்றுங் கூறுவர். அங்ஙனமாயின் மாயையும் அசத்

தென்று பறை யடிக்கும் வேதத்திற்கும் பரமசிவன் வாக்கியங்களுக்
கும் தாயுமானார் முதலிய ஆன்றோர் சித்தாந்தங்கட்கும் யாது சமா
தானம் புகலுவர்? அவைகளை யெல்லாம் அசத்துரை என்று கூறுவத
னோடு அவ்வான்றோர்: தம்போல் தக்க பள்ளிக்கூடத்தின்கண் அமர்
ந்து வேதாதிபாடங்களைக் கிரமமாய்க் கற்றுத் தெளிந்தில ரென்றுங்
கூறுவார்போலும். கயிறு குட்டையாயின் சிறியபாம்பும், நெட்டையா
யின் பெரியபாம்பும்தோற்றுவாம்; கயிறுஎவ்வளவு பிரமாணமோ அந்த
அளவுக்கதிகமாகப்பாம்பின் தோற்றமுண்டாகாதாம்; அந்த உபமானத்
தால்பிரமத்தில் தோற்றல்மாத்திரமாய் விளங்கும சிற்சடப்பிரபஞ்சம்
பிரமத்தின் பிரமாணத்தளவாயேவிளங்கவேண்டுமாம். இதனால்பிரமம்
எவ்வளவுபெரிதென்று கேட்பார்க்கு உலகம் எவ்வளவுபெரிதோ அவ்
வளவு பெரிதென்று விடைபகர்வதே இவரது தலை எழுத்தாய் முடிக்
ததாம் என்று நம் நாயகர்கூறுகின்றார். இது எட்டுணையும் பொருந்தாது.
மனது தன் பிராந்தியால் ஒரு பொருளினிடத்தில் மற்றொரு பொ
ருளை ஆரோபிக்கும்போது ஆரோபப்பொருள் எப்பிரமாணமோ அப்
பிரமாணமே அதிஷ்டானப் பொருளு மிருக்கவேண்டுமென்ற நியம
மில்லை. அங்ஙனமாயின் மன மாயையைப்பற்றி "சச்சிதானந்தசிவம்"
4-வது பாட்டில் ஸ்ரீ தாயுமானார்"இமையளவுபோதை ஒரு கற்பகாலம்
பண்ணும்" என்று சொல்லார். இவ்வளவுதானா? அப்பாட்டில் கூறிய
மனச் செய்கையின் விசித்திரங்களை நம் நாயகர் சிறிது ஆலோசிப்ப
ரேல் மனோகற்பனைக்கு அளவுமில்லை, நியமமுமில்லை என்பது நன்கு
வெளிப்படும். "அணுவளவுபோதை ஒரு கற்பகாலம் பண்ணும் மன
மாயை" ஒரு கற்பகாலத்தை ஏன் அணுவளவாகச் செய்யாது? இவ்
வளவுதானா? "இந்திரஜால மமைய ஒரு கூத்துஞ் சமைந்தாடும" என்
றுங் கூறுகின்றாரே நந் தாயுமானார். அவ்விந்திரஜாலத்திற்கு ஒரு நிய
மம் கற்பிக்கப் பார்க்கிறார் நம் நாயகர். இப்படிப்பட்ட மனத்திற்குச்
சிவத்தில் ஏகதேசப் பிரபஞ்சத்தைக் கற்பிக்கத்தானா சடினபா
கும்? மகத்தை யணுவாகக் காட்டவும் அணுவை மகத்தாகக் காட்ட
வும் மாயாசொரூபமாகிய மனதிற்கு வன்மையுண்டென்று நம் நாயகர்
அறியார்போலும்! இங்ஙனமாய அகடிதகடனா சாமார்த்தியமுடைய
தாகையாற்றான், உள்ளதை இல்லாததாகவும் இல்லதை யுள்ளதாக
வும் தோற்றுவிக்கும் மனதை இல்பொருளாக வேதாதிப் பிரமாணங்
களுக்கிணங்கக் கூறுகின்றனர் பெரியோர். தாயுமானாரும் "ஏசற்றவந்
நிலை"என்ற பதிகத்தில் 9-வது செய்யுளில்"போயொளித்த நெஞ்சேநீ,
மருள்தீர் முயற்கோடோ வான்மலரோ பேய்த்தேரோ, இருள்தீரநீ
யுறைந்த தெவ்விடமோ" எனக் கூறியிருப்பதையும் அறிந்திடுவாராக.
அறிஞர்கள் மனோகற்பனையினால் பெரிது சிறிதாகவும், சிறிது பெரி
தாகவும் தோற்றுமென்பதற்கு நஞ் சத்துருவின்பால் நிகழுங் குற்றம்
பெரிதாகவும் அபிமானமுடையோர் பால் நிகழுங் குற்றம் சிறிதாக
வும் தோற்றுதலே சான்றாம்.

மேற்கூறிப்போந்த நியாயங்களால் பிரபஞ்ச அள்வு சிவமும், சிவத்தினளவு பிரபஞ்சமும் இருக்கவேண்டு மென்ற நியமம் இல்லை யென்பது திண்ணமாகலின், நாயகர் கொண்டுவந்த ஆக்ஷேபம் பயன் படாமற் போயிற்றென்பது யுக்தியாலும் அனுபவத்தாலும் சித்தித்த தாயினும் பிரமாணமுங் காட்டுவோம்:—

[illegible]தசங்கிதை காலவளவையுரைத்த அத்தியாயம்.

சொற்றவிவ்விரு[illegible]மூர்த்தபேதங்கடோன்றியகாரணத்தொடுங்கு
முற்றிசெகமுமொ[illegible]டுங்குமாலனைத்துமொடுங்கிடங்கொடுப்ப தமாயை
மற்றவம்மாயை[illegible]பேதமாய்ப்பரமன்மாமலரடித்தலத்தொடுங்குந்
தற்றிமெபேத[illegible]ாயினும்வேருய்த்தோன்றலின்மாயையேயென்றும். (கூ)

பிரமகீதை சாந்தோக்கிய உபநிடதம்.

நானுமந்த வரியமரர் ஞாலமொன்று நரர்விவித
யோனியிந்த முழுதுமதனூடெழுந்த சிறுதிவலே. (உகூ)

பகவற்கீதை விபூதியோகம்.

பலவினியுரைத்தென்னிந்தப்பல்லுயிரனைத்துமெல்லா
வுலகமுமொடுங்கிநிற்பதென்னிலோரிடத்தினுள்ளே
கலவலனவற்ேறுடென்ருன். (உகூ)

பிரமகீதை முண்டகோபநிடதம்.

எங்குநிறைந்தபரத்தினிலோகமெழுந்தழியும்படிகா
னங்கியெழும்பொரிபோலுமகம்புறமாயதமாயையெனுங்
கங்குல்கடந்துயிருக்குயிராயொருகாலழிவற்றகமா
யங்கபிராணன்மனங்களறுஞ்சிவனுகியவக்கரமே. (கஉ)

சுருதிஸ்மிருதி புராணுதிகளெல்லாம் அத்வைதமே யுண்மையெ ன்று சொல்ல அதை வெறுத்துத் துவிதத்து அநாதரித்தலும் மாயை யின் வல்லபமேயாம். இதற்கு அடியில் வரும் பிரமாணம் சாக்ஷி யாகும்.

பிரமகீதை பிரகதாரண்ணிய உபநிடதம்.

வேதநான்மிருதிபுராணமத்துவிதமெய்மையேவிள[illegible]மெய்த்தர்க்கஞ்
சாதியாநிற்கத்தத்துவஞானத்தவருமிப்பொருளேயேசார
வாதியாஞ்சிவனுராயணனுனிங்கறைந்ததுமபேதமாயிருக்க
வாதியாமொருவர்க்கிதையனுதரித்தன்மாயையினுடையவல்லபமே. (கசு)

நம் பண்டிதர் மூலபத்திராதிபரை மறுத்தெழுதிய பத்திரிகைக்கு 'ஆநாமதேயாது ஆபாசம்' எனப் பெயரளித்தார். இதனல் பேரில் லாமல் எழுதுவது குற்றமெனப் புலப்படுகின்றது. அங்ஙனமாயின் உண்மையாய்த் தமது பேரைக் காட்டாது இவரது பத்திரிகையி லெழுதிவரும் அரக்கோணவாசி, வீரபத்திரமூர்த்தி, தினகரன் முத லியவர்களெல்லாம் அநாமதேயர்கள்தானே. இன்னும் தம்பெயரைக் காட்டாது இவரது பத்திரிகைக்கு விஷயமெழுதிவரும் கையொப்பக் காரரும் அநாமதேயர்தானே. இதுகாறும் ஷ அரக்கோணவாசி,

வீரபத்திரமூர்த்தி, தின்கரன் முதலியவர்களே அநாமதேயரென இகழ்ந்து கூறியிருப்பாரா? இவரிருக்கட்டும்; உலகிலுள்ள எப்பத்திராசிரியரேனும் தமது பேரைக்காட்டா தெழுதுங் கடிதகேயரை அநாமதேயரென இகழ்ந்து கூறினர்களா? பத்திரிகைகளில் தமது பேரைக் காட்டாதெழுதுவது சகஜமாகவும் குற்றங்கூறுவதற் கிடனில்லாமல் இருக்கவும், இவரும் இதுகாறும் பெயரைக்காட்டாதெழுதுங் கடிதங்கள் குற்ற மற்றனவெனக் கருதித் தம் பத்திரிகையிற் பிரசுரித்திருப்பதோடு அவர்களை அநாமதேயரென இகழாது கௌரவமாகக் கொண்டிருக்கவும் இப்போதுமாத்திரம் ஷை மூலபத்திராதிபரை அநாமதேயரென இகழ்வது நன்றோ? குற்ற மின்னதெனவும் குண மின்னதெனவும் தெரிந்துகொள்ளத் தெரியாது, குணத்தைக் குற்றமாகப் பரிணமப்படுத்தி இகழ்ந்துகூறுமிவர்: பத்திராசிரியராக நிற்பது "கிழக்கு மேற்கு அறியார், வழக்குப்பேசப்புகுந்தா" ரென்பதற் கினமாமென்க.

இவர் இயற்றிய "ஆபாச" பத்திரிகை சுருதி, யுக்தி, அனுபவ விரோதமாயும், அத்வைததூஷணமாயும் இருந்தமையால், அதைஷை சுருதி, யுக்தி அனுபவங்களைக்கொண்டே நிக்கிரகம்செய்து, அந்நிக்கிரகத்துக்கு "அத்வைத தூஷண நிக்கிரகம்" என நாமங் கொடுத்து வெளிப்படுத்தினும். நிற்க; நம்பண்டிதர் இப்பத்திரிகையில் காட்டிய நியாயங்களையும், வேதாதிப்பிரமாணங்களையும் பூர்வபக்ஷம் பண்ணித் தம் சித்தாந்தத்தை நிலைபெறச் செய்வரேல், அவர்சாஸ்திர விசாரணை செய்யும் சாதுக்களுக்கு வரையற்ற நன்மை செய்தவ ராவார். தாம் கொண்ட கொள்கையையே சாதிக்கச் சாஸ்திரார்த்தங்களை வலிந்தேனும் மாறுகவேனும் கொண்டு, நியாயம் சொல்லப்புகுவரேல் அவர் வேதபாகியராவது மன்றி, அவரு மவரினத்தவரும் பாஷாண்டிகளெனவும் படுவார்கள். இதற்குப் பிரமாணம் வருமாறு:—

பிரமகீதை ஐதரேய வுபநிடதம்.

வேதஞ்சொனபடியொழியவேறுசிலகலைகளினை
யோதுந்திறமருவிமறையோதுஞ்சிவனிருகமலப்
பாதந்தொழநினைவிலர்கள்பாசண்டிகளெனவறிக
நீதொன்றியவவர்களொடுசேருங்கலர்களுமவர்கள். (கசு)

மையறுவேதமார்க்கமறந்துபாசண்டமார்க்கக்
கையரான்மயக்கப்பட்டுக்கலியுகந்தன்னி லுள்ளோர்
மெய்யுணர்வனந்தானந்தமேனியாஞ்சிவனைப்பூசை
செய்யவாதரியார்செய்வார்தம்மையுஞ்செய்யவொட்டார். (கஎ)

தருமமதறிவில்பாசண்டர்தங்களை
மருவலால்வேதமாவாக்கியப்பொருள்
கருதிடாரதுகாமணியிற்காட்டிடுங்
குருவையும்வழிபடார்குதர்க்கமேவலார். (கஅ)

ஷ கேனோபநிடதம்.

பரமாத்துவிதஞானியேபரதேவதைதானவனேயித்
திரமாமுத்தியானிங்குச்செப்பும்பொருள்செய்வினையாலும்
உரமாந்ததீசிகௌதமனுலுண்டாஞ்சாபவுரையாலுங்
கரமானுடர்நெஞ்சதனிற்காதல்செய்யாதொருகாலும் (௫௬)

சிவரகசியம் ரிபுகீதை உகூ-ம் அத்தியாயம்.

விகலமுறு வேதாந்தவாக்கியத்தால் விளம்பியதேயுண்மையெனவிசுவாசித்துச், சகலமுணர்பரமசிவனுணர்த்தவண்ணஞ் சாற்றியவென்வாக்கியமும்விசுவாசித்து, மிகவுமாய்ப்பழகியிடுநின்னூகத்தான் மேவியநின்சந்தேகமனைத்து நீக்கி, யிகழ்வுதரும்விபரீதமனைத்துந்தீர விசைத்தவணமெப்போதுநிதித்யாசிப்பாய். (௩௪)

சுருக்கமுறப்பரமசிவனெமக்குரைத்த சுருதிமுடிப்பொருளிதனைச்சுருங்கச்சொன்னோ, மிருக்குமுதன்மறைமுடியின்சுருக்கமான விப்பொருளையிருமையறக்கேட்டுணர்ந்தோ, ரருக்கன்முதற்சோதிக்குஞ்சோதியான வகண்டேகரசவடிவாம்பரமேயாவர், நெருக்கமுறவெங்குமொருநிறைவாய்நின்ற நிமலபரசிவனுணைநிச்சயந்தான். (௩௮)

சூதசங்கிதை சூதகீதை.

உருவநோக்குதற்குநேத்திரம்போலேயுற்றிடுகிரணமுன்னைவையுங்
கருதுகாரணமாகாதனபோலக்கதித்திடுதருமமீச்சுரன்முன்
மருவதீர்ந்தியவிடயங்கவர்தற்குமறையன்றித்தருக்கமேதுவன்று
தெருளின்றிவேதப்பொருளினுக்கேபஞ்செய்பவனரகினைச்சேரும். (௧௩)

முற்றிற்று.